# இரு பெரும் வில்லாளிகள்

# (TWO GREAT BOWMEN)








BY

A. S. MUTHIAH MUDALIAR, B.A.,

*Lecturer in Tamil,*

*H. H. The Maharaja's College of Arts,*

*Trivandrum.*

SRI VANI VILASAM PUBLISHING HOUSE

KARAMANAI : : TRIVANDRUM

 1933 [*Price* As. 14.

17-3

# இரு பெரும் வில்லாளிகள்

—— :o: ——

## கர்ணன்

### I

உலகில் மக்கட் பிறப்பை அடைந்தவர்கள் யாதேனும் ஒரு புகழைப் பெறுதல் வேண்டும். "தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார், தோன்றலில் தோன்றாமை நன்று," என்பது பொய்யாமறை. வீரத்தினால் விளங்கியவர் சிலர்; வெற்றியினால் மேன்மையுற்றோர் சிலர்; செங்கோன்மையினால் சிறப்புற்றவர் சிலர்; பரோபகாரத்தினால் பதவி அடைந்தோர் சிலர்; மானத்தினால் மதிப்பு வாய்ந்தவர் சிலர்; எடுத்த கொள்கையை நிறைவேற்ற வேண்டும் என்ற தீரத்துடன் திகழ்ந்தவர் சிலர்; புலமையினால் பொலிவுற்றோர் சிலர்; வள்ளன்மையினால் வனப்பு வாய்ந்தவர் சிலர். இன்னோரன்ன இசையில் இலங்கியவர் ஒரு சிலரே.

பிறப்புண்டேல் இறப்புண்டு என்பது உறுதி. இறந்தவர் பிறத்தலும் பிறந்தவர் சாதலும் புதுவதன்று; உலகத்தியற்கை. உலகத்தில் பல்லாயிரக் கணக்கான மக்கள் தோன்றி விண்ணுலகை அடைந்துளர். அவர்களில் ஒரு சிலரே புகழ் எய்தி தங்கள் பெயரை இப்புவியில் நிலைநிறுத்திவிட்டு மறு உலகை எய்தியுளர். அன்னவர் பூதவுடம்பு அழியினும், புகழுடம்பு உலகம் உள்ளளவும் நிலைபெற்று நிற்கின்றது. செயற்கரிய செய்கை செய்தவர்களாதலினால், அன்னோர் பெயர் என்றும் நிலவுகின்றது. "மன்னுதல் வேண்டின் இசை நடுக" என்ற முதுமொழி கருதற்

பாற்று. இத்தகைய புகழ் வாய்ந்தவர்களில் கொடையி னுல் குவலயம் கொண்டாடும் கர்ணன் ஒருவனுய்த் திகழ் கின்ருன்.

கர்ணன் பஞ்சபாண்டவர்களின் தாயாகிய குந்தி தேவியிடம் தோன்றியவன். இந்த அம்மையார், யாதவர் கட்கு அரசன், சூரன் என்பவனின் மகளாகும். குந்தி போஜன் என்ற அரசன் தனக்குப் புத்திரப் பேறு இல்லா மையினுல் இப் பெண்மணியை எடுத்து வளர்த்து வந்தான். அன்னவள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாக வளர்ந்து வரலாயினள். பெற்ருேர்கள்பால் அன்பும், இன்முகமும், புத்தி சாதுரியமும் உடையவளாய் அமைந் தாள். நற்குணங்கள் ஒன்று சேர்ந்து ஓர் உருவெடுத்தது போல் காணப்பட்டாள். மகரிஷிகள் அரசனைக் காணவந் தால், அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளெல்லாம் இந்த அம்மையாரே புரிந்து வந்தாள்.

இவ்வாறு நாட்கள் கழிய, ஒருநாள் துருவாசர் என்ற ஒப்பற்ற மகாமுனி அரண்மனைக்கு எழுந்தருளி வர, மன் னன் முக மலர்ச்சியோடு முனிவரை உபசரித்து அன்ன வர்க்கு வேண்டிய பணிவிடைகள் இயற்றி வந்தான். வழக் கம்போல குந்தி தேவியை அம்முனி சிரேஷ்டருக்கு வேண்டும் உதவிபுரிய அமைத்தான். அன்னவளும் இணை யற்ற தவசிக்கு ஓர் குறைவும் வராதபடி காரியங்களைச் செம்மையாய்ச் செய்தனள்.

அம் முனிபுங்கவர் இம் மங்கையைப் பலபடியாகப் பரி சோதித்தார். எல்லாவற்றிலும் இணையற்று இலங்கினள். துருவாசர் அவள்மேல் மிக்க மகிழ்ச்சி அடைந்து, அவள் விரும்பும் காரியத்தை அளிக்க எண்ணினுர். அவ்வம்மை யாரைப் பார்த்து, “உனக்கு வேண்டும் வரம் யாது? நீ

கேட்கின்ற வரத்தை யான் தருகிறேன்” என்று சொன்னார். அப்பெண்மணி “கடவுள் அருளாலும், தங்கள் கடைக்கண் நோக்கத்தாலும் யான் ஓர்வித குறைவின்றி வாழ்கின்றேன். தாங்கள் அடையும் ஆனந்தத்தையே எதிர்பார்க்கின்றேன். எனக்கு யாதொரு பிரதிபலனும் வேண்டாம்” என்றாள். தவசிரேஷ்டர் இதைக் கேட்டு அகமகிழ்ந்து, “யான் ஒரு மந்திரம் சொல்லித் தருகிறேன். நீ எப்பொழுது எந்தக் கடவுளை விரும்புகிறாயோ, அதை மனதினால் தியானிப்பாய். அப்பொழுது உன் முன் அத் தெய்வம் வந்து தோன்றி நீ விரும்புகிறபடி செய்யும்” என்று கூறிவிட்டு, அவண் நின்றும் அகன்றார்.

பல ஆண்டுகள் கடந்தன. குந்திதேவியும் மங்கைப் பருவம் அடைந்து மிக்க எழிலுடன் இலங்கினாள். கண்டவர் கண்களைக் கவரும் தன்மையை அடைந்தாள். மேகத்தை ஒத்த நீண்ட கூந்தலும், மதிபோன்ற முகமும், கயல்மீன் அன்ன கண்களும், பவளத்தன்ன உதடும், அமை தோளும் உடையவளாய்த் திகழ்ந்தாள். இவ்வாறு வளரும் நாளில் ஒருநாள் அதிகாலையில் எழுந்திருந்து தனியாக கங்காநதிக்கு நீராடச் சென்றனள். நீராடி முடிந்ததும், படித்துறையில் உட்கார்ந்தாள். சுற்று முற்றும் பார்த்தாள். சூரியன் உதயகிரியில் தோன்றும் சமயமா யிருந்தது. அவ்விளஞ் சூரியன் அழகில் ஈடுபட்டாள். அப்பொழுது துருவாச முனி உபதேசித்த மந்திர சக்தியைப் பரிசோதிக்க எண்ணி, “தனக்கு ஞாயிற்றைப்போல் அழகு மிக்க ஒரு புதல்வன் வேண்டும்” என்று நினைத்தாள். உடனே வெஞ்சுடர்க் கடவுள் அன்னவள் முன்தோன்றி, “உனக்கு வேண்டுவது யாது?” என்றனன். அம்மங்கை “எனக்கு ஒன்றும் வேண்டாம்.

வேடிக்கையாக யான் அம்மந்திரத்தைத் தியானித்தேன். கஷ்டப்பட்டு என்னிடத்தில் எதற்காக வரவேண்டும். தங்கள் இருப்பிடத்திற்குச் செல்லலாம்'' என்று கூறினாள். மங்கை மறுத்துரைத்ததை மனமாரக் கேட்ட அத் தழல்நிறக் கடவுள், "நீ என்னைப்போல் காதில் குண்டலங்களும் பொன் கவசமும் தரித்த ஓர் புத்திரன் வேண்டும் என்று எண்ணியதால், நீ எண்ணினபடியே அடைவாய்'' என்று இயம்பி, மறைந்தான்.

அவ்வாறே உடனே சூரியனைப்போன்ற ஒளி பொருந்திய ஒரு அரும் புதல்வனைப் பெற்றெடுத்தாள். அப்பொழுது கன்னியழியாப் பருவமுடையவள் ஆனமையால், புத்திரனை ஈன்றதும் மனதில் நாணம் குடிகொண்டது. "என் செய்வேன்? அறியாது இக்காரியம் செய்துவிட்டேனே. 'இளமறி பயமறியாது' என்ற உண்மை வெளியாயிற்றே. என் குடும்பத்திற்கு ஒரு பழிச்சொல் தேடினேனே'' என்று இவ்வாறு புலம்பி வருந்தினாள். பிள்ளை ஆசை ஒரு பக்கமும், நாணம் மறு பக்கமும் இழுக்க, இருதலைக்கொள்ளி எறும்புபோலத் தயங்கினள். "பழிச் சொல்லுக்குப் பயந்து பிள்ளையை விட்டுவிடுவது நலம்'' என்று எண்ணினாள்.

உடனே அந்நதியில் ஒரு மரப்பேழை மிதந்து வருவதைக் கண்டு ஆனந்த மடைந்து, அப்பெட்டிக்குள் குழந்தையை அடைத்து நதியில் விட்டுவிட்டாள். தன் குழந்தையை இழந்த வருத்தத்தை வெளிக்காட்டாது அரண்மனைக்குச் சென்றாள். இது வேறு ஒருவருக்கும் தெரியாது. நீண்டகாலமாக இது ரகசியமாகவே இருந்தது.

## II

இவ்வாறு விடப்பட்ட பெட்டி மிதந்து சென்று அங்கதேசக் கரையை அடைந்தது. அச்சமயம் அதிரதர் என்ற ஒரு சூதன் தன் மனைவியோடு கூட அந்நதியில் விளையாடிக்கொண்டிருந்தான். பெட்டி வருவதைக் கண்டு அதை எடுத்துக்கொண்டு கரையை அடைந்தான். ஆத்திரத்தோடு அதைத் திறந்து பார்க்க அதில் இளஞாயிறு என்ன எழில் வாய்ந்து கவசகுண்டலங்களோடு விளங்கும் ஓர் அரும் புதல்வனைக் கண்டான். தன் மனைவியாகிய இராதாவிடத்திற் காட்ட, அவளும் அடைந்த ஆனந்தத்தை அளவிடலாமோ?

இருவரும் மிக்க காதலோடு அக்குழந்தையை வளர்த்து வந்தார்கள். கடவுள் தங்களிடத்தில் கருணை கூர்ந்து இம் மகவை நல்கியுள்ளார் என்று உவகை எய்தினர்கள். பிள்ளையை ஈ எறும்பு அணுகாது கண்ணை இமை காப்பதுபோல அல்லும் பகலும் காத்து வந்தார்கள். அவர்கள் அக்குழந்தைக்கு 'கர்ணன்' என்று பெயரிட்டார்கள். காதில் குண்டலங்கள் தரித்திருந்தமைபற்றி இப்பெயர் இடப்பட்டது. சூத குடும்பத்திற் பிறந்ததாக எண்ணப்பட்டதினல் 'சூதசுதன்' என்றும் அழைக்கப்பட்டான்.

கர்ணன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். "இளமையிற் கல்" என்ற மொழிப்படி அவனை வளர்த்து வந்த தந்தை அவனுக்கு வேண்டும் கல்வி பயிலும்படிச் செய்து வந்தான். நல்லாசிரியனை நாடிப் படிக்க வைத்தான். கர்ணனும் சகல கலைகளிலும் தேர்ந்து விளங்கினன். குரு அவனை மிகவும்

மெச்சினர். சிறந்த ஒரு வில்லாசிரியனை யடைந்து வில் வித்தையில் வெகு சமர்த்தனானன். அதனோடு அமையாது வில்வித்தையில் வீரனாய் விளங்கும் பரசுராமனிடத்திற் சென்று அவ்வித்தையில் நன்கு பயில எண்ணி, அவரை அடைந்து "அண்ணலே! யான் ஓர் அந்தணன். தங்களிடத்தில் வில்வித்தை கற்க வந்தனென். எனக்கு அருள் புரிய வேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டான்.

பரசுராமர் பிரமான குடும்பத்திற் பிறந்தவர். சத்திரியர்களைத் தொலைக்க வேண்டு மென்ற எண்ண முடையவர். பிராமணர்களுக்குத் தவிர வேறு யாருக்கும் வில்வித்தை சொல்லிக் கொடுப்பதில்லை. இதை அறிந்த கர்ணன் அவ் வந்தணரிடத்தினின்றும் எவ்விதமாயினும் சிலைத்திறமை அடையவேண்டும் என்று எண்ண முடையவனாய் பொய் பகர்ந்தான். பரசுராமர் வில்வித்தையிலுள்ள சகல பயிற்சிகளையும் சொல்லிக் கொடுத்தார். கர்ணன் வில் திறமையில் தனக்கு இணை யாருமில்லை என விளங்கினான்.

அருச்சுனன் தந்தையாகிய இந்திரனுக்கு வந்த வருத்தத்திற்கு அளவில்லை. தன் மைந்தனுக்கு இணையாக வில் வித்தையில் ஒருவரும் இருக்கக் கூடாது என்று பயில் வித்து வர, கர்ணன் பரசுராமரிடத்தில் பொய்கூறி வில் வித்தையில் 'சிறப்படைவதைப் பார்த்துப் பொறாமை கொண்டு, கர்ணனைக் காட்டிக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் உற்ற தருணம் பார்த்துக் கொண்டே இருந்தான். ஒருநாள் பரசுராமர் கர்ணன் மடியில் தலையை வைத்து உறங்கிவிட்டார். அச்சமயம் இந்திரன் ஒரு நண்டு வடிவு எடுத்து கர்ணன் துடையைத் தொளைத்தான். உதிரம் சிந்தியது. தன் குருவின் உறக்கத்துக்குப் பங்கம் வருமே என்று எண்ணி தன் வருத்தத்தைச்

சகித்துக்கொண்டான். குருதி கொப்புளித்து குருவின் கூறையை நனைத்தது. ஈரம்தட்டியவுடன், விழித்தார். செய்தியை அறிந்தார். "அந்தணர் குலத்தில் உதித்தவனாயிருந்தால், இவ்வாறுள்ள துன்பத்தைச் சகிக்கமாட்டான். அதனால் இவன் மறையோனல்லன்" என்று எண்ணி, கோபங்கொண்டு கர்ணனை நோக்கி உண்மையை உரைக்கக் கூறினார். முனிபுங்கவர் கோபத்துக்கு ஆளாகாமலிருக்க, கர்ணன் தன் குலத்தைப்பற்றிக் கூறிப் பொறுத்துக் கொள்ளுமாறு வேண்டினான்.

குரு சிறிது சீற்றந்தணிந்தவராய், கர்ணனைப் பார்த்து "நீ இவ்வாறு பொய்மொழிந்து என்னை ஏமாற்றியதால், நீ மிகுந்த ஆபத்திலிருக்கும்போது, உன் வில்வித்தையின் திறம் உன்னைவிட்டு நீங்கும்" என்று கூறி, அவனை அப்புறப்படுத்தினார். மிகுந்த வருத்தத்துடன் தன் வீடு நோக்கிப் புறப்பட்டான் கர்ணன். தன் இல்லத்தில் வழக்கம்போல வில்லும் அம்பும் கொண்டு விளையாடிக்கொண்டிருந்தான். ஒருநாள் அவன் எய்த அம்புபட்டு ஒரு இளங்கன்று இறந்தது. அதன் சொந்தக்காரன் வந்து மிகவும் கோபத்துடன் கர்ணனைப் பார்த்து, "இந்தக் கன்றை நீ கொன்றதனால், போரின் மத்தியில் உனது தேர் உனக்கு இடையூறுகும். நீயும் யாரைக் கொல்லவேண்டும் என்று நினைக்கிருயோ அவனாலேயே கொல்லப்படுவாய்" என்று சாபம் கூறிவிட்டு அகன்றான். இவ்விருவித சாபங்களையும் ஏற்று விளையாடிக்கொண்டிருந்தான். காலஞ் செல்லச் செல்ல இந்தச் சாபங்களை மறந்தவனாய்க் காலங்கழிக்கலானான். இதுநிற்க.

அத்தினாபுரியில் திருதராட்டிரன் தன் மக்கட்கும் தன் தம்பி மக்கட்கும் சகல கலைகளையும் பயிற்றுவித்து அவர்களின் திறமையை அறிவதற்காக, ஒரு சாலை அமைத்தான்.

நகரமாந்தர்கள் வந்து குழுமினர்கள். குந்திதேவி, காந்தாரி உட்பட வேறு பெண்களும் தங்கட்கு ஏற்பட்ட இடத்தில் இருந்தார்கள். துரோணர், கிருபாச்சாரியர், பீஷ்மர் முதலிய சான்றோர்களும் அவர்கட்கு ஏற்பட்ட இடத்தில் இனிது வீற்றிருந்தார்கள். துரோணர், கௌரவர் பாண்டவர்களுக்குக் குருவாய் அமைந்தார். அன்னவரின் சம்மதத்தின்மேல் அமர் ஆடத் தலைப்பட்டார்கள். அருச்சுனனின் வில் திறமையை வியவாதார் ஒருவரும் இலர். துரியோதனன் மாத்திரம் அவன்மேல் பொறாமை கொண்டான். தன் பக்கல் இத்தகைய வில்லாண்மை படைத்த ஒரு வீரன் இல்லையே என்று வருந்தினன். அச்சமயம் ஓர் இளைஞன் அக்கூட்டத்தினின்றும் தொடை தட்டிக்கொண்டு வெளியே வந்தான். அவனே கர்ணன். கர்ணனும் துரோணர், கிருபர் இவர்களின் சம்மதத்தின்மேல் தன் வில் திறமையைக் காண்பித்தான். இதைக் கண்டு வியந்தான் துரியோதனன். அவனைக் கட்டித் தழுவி, கர்ணனை நோக்கி, "நீ இன்றுமுதல் என் நண்பனு யிருப்பாய். எனக்கு வேண்டிய உதவி நீ புரிவாய்" என்று கூறினன். கர்ணன் பார்த்தனைத் தன் நேருக்கு வந்து போர் புரிய விரும்பினன். அதற்கு அருச்சுனன் "கர்ணனே! நீ ஒரு விதமான சுயமரியாதை இல்லாதவன். ஒருவரும் அழையாமல் வலியவந்து இவ்வாறு சொல்வது பொருந்துமா?" என்று மொழிய, கர்ணன், "பார்த்தனே! இந்தச் சாலை பொதுவாக அமைக்கப்பட்டது. அதனால் யாரும் வந்து தன் திறமையைக் காண்பிக்கலாம். இது உனக்கு மாத்திரம் சொந்தமன்று. நீ பெரியவன் என்று கர்வங்கொள்ளாதே. என்னோடு வா. உன் வில்லாண்மையைப் பார்ப்போம்" என்று அருச்சுனன் மனம் உளையக் கூறினன்.

கர்ணனும் அருச்சுனனும் எதிர்த்து நின்றார்கள். சிலர் "கர்ணன் ஜெயிப்பான்" என்றார்கள். வேறு சிலர் "பார்த்தன் பலன் அடைவான்" என்றார்கள். இவ்வாறு நிற்பதைக்கண்ட குந்திதேவி அறிவு கெட்டு மயங்கினள். இருவரும் போர்புரியத் தொடங்கினார்கள். அவ்வமயம் கிருபாச்சாரியார் எழுந்திருந்து, "கர்ண! அருச்சுனன் ஒரு பெரிய குடும்பத்தில் பிறந்தவன். அவனோடு போர் தொடங்குகிறவன் அத்தகைய மதிப்பு வாய்ந்தவனாக இருக்கவேண்டும். நீ உன் குடும்பத்தைக் கூறுவாய்" என்று உரைத்தார். இவ்வார்த்தைகளைக் கேட்டதும், கர்ணன் பதில் ஒன்றுங் கூறாது தலைகுனிந்தான். மிகவும் வெட்கம் அடைந்தான். இச்சமயத்தில் துரியோதனன் எழுந்து, "பெரியோரே! நீர் மொழிந்தது சரியே. அரச குடும்பத்தில் பிறந்தோரும், பெரிய சேனையில் அதிபதியும், வீரத்தனம் பொருந்தியவர்களும் அரசர் என்று கூறுதல் தகும். இதுவும் சம்மதமில்லையானால், கர்ணனை அங்கதேசத்து அதிபதியாக ஆக்குகிறேன்" என்று கூறினான். உடனே தன் தந்தை திரிதராட்டிரன் அனுமதி பெற்று பட்டத்துக்கு வேண்டிய சடங்குகள் செய்து, கர்ணனை அங்கநாட்டு அரசனாக்கினான். கர்ணன் அடைந்த களிப்பு அளவிடற்பாலதன்று. துரியோதனன் செய்த நன்றியை மறந்தானல்லன். "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்நன்றி கொன்றமகற்கு" என்ற மறைமொழிக்கு இலக்காயினன்.

## III

கர்ணனை அங்கநாட்டுக்கு அதிபதி ஆக்கினமையை அறிந்து அவன் தந்தை, அதிரதன், அவண் வந்தடைந்

தான். தந்தையைக் கண்டு வணங்கினான் கர்ணன். அவன் ஒரு சூதன் மகனென்று கண்ட பீமன் அவனை ஏளனம் செய்தான். "நீ தேர்ச்சாரதியாக இருக்கத் தகுந்தவன். ஒரு தேசத்தை ஆளும் தகுதி உனக்குக் கிடையாது. தகாத உனக்கு உரிமை அளித்தது யாகத்தில் கிடைத்த அவிசை உரிமையாளன் சாப்பிடாது அவன் நாய்க்குக் அளித்ததை ஒக்கும்.'' பீமனின் இம்மொழிகள் கர்ணன் மனதைப் புண்படுத்தியது. பதில் ஒன்றுங் கூறமுடியாது நாணத்துடன் தலைகவிழ்ந்து நின்றான். துரியோதனன், இதைப் பொறுக்கலாற்றாது, பீமசேனனைப் பார்த்து, "பீமசேனா! இவ்விதமாக மொழிவது நல்லது தானா?

'கள்ளி வயிற்றில் அகில் பிறக்கும் மான் வயிற்றில்
ஒள்ளரிதாரம் பிறக்கும் பெருங் கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்கும் குடி''

என்பது நீ அறியாயோ?

வீரர்கள், கடவுள், ஆறு இவர்களின் உற்பத்தி அறிய முடியுமோ? நமது பாட்டனார் காங்கேயன் பிறப்பைப் பற்றித் தெரியாதா? துரோணாச்சாரியார் பிறப்பு யாது? உன்னுடைய பிறப்புதான் என்னே. கர்ணன் ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்தவனல்லன் என்பது அவன் கூடப் பிறந்த கவசகுண்டலங்கள் சான்றன்றோ. இத்தகைய ஒருவனைப் பழித்துக் கூறியது தகாததன்றோ?'' என்றான்.

கதிரவனும் அத்தமன கிரியை அடைந்தான். உடனே யாவரும் அப் போர்ச்சாலையை விட்டு அகன்று தத்தம் இல்லம் நோக்கிச் சென்றனர். துரியோதனன் தன் பக்கத்திலும் ஒரு வில்லாளி உளன் என்பதை அறிந்து அளவிறந்த ஆனந்தம் அடைந்தான்.

துரியோதனாதியர்கள் பீமனின் வல்லமையை உணர்ந்து அவனை எவ்விதமேனும் தொலைக்கவேண்டும் என்று எண்ணினார்கள். விஷம் கொடுத்துக் கொல்லத் துணிந்தார்கள். ஒருவித உபாயமும் பலிக்கவில்லை. பின் அரக்கு மாளிகை கட்டுவித்து அதில் பாண்டவர்களைத் தங்கும்படி ஏற்பாடு செய்தார்கள். பாண்டவர்கள் அதில் தங்கியிருக்க, இரவு நடுவில் அதில் தீ வைக்கலானார்கள். இதை முன்னமே அறிந்தபாண்டவர்கள் ஒரு சுருங்கையின் வழியாக காட்டை அடைந்தார்கள். கடைசி ஏகச்சக்கர நகரத்தைச் சேர்ந்து வாழ்ந்து வந்தார்கள். இங்ஙனம் இருக்கையில் பாஞ்சால தேசத்து மகளின் சுயம்வரச் செய்தியை அறிந்து அவண் உற்றார்கள்.

அந்தச் சுயம்வர மண்டபத்திற்கு கௌரவர்கள், கர்ணன் முதலிய அரசர்கள் வந்திருந்தார்கள். அங்கே வைக்கப்பட்டிருந்த பந்தயத்தை ஒருவராலும் வெல்ல முடியவில்லை. கர்ணனும் தோற்றான். கடைசியாக அருச்சுனன் அதில் வெற்றியடைந்து மற்ற அரசர்கள் முகங் கவிழ, திரௌபதியை மணந்தான். இது கௌரவர்கட்கும் கர்ணனுக்கும் மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. அருச்சுனனை எதிர்க்க, அவன் யாவரையும் வெற்றி கொண்டான். கர்ணனும் தோற்றான். அதுமுதல் கர்ணனுக்கு மிகுந்த வருத்தம் உண்டாயிற்று. யாவரும் அவரவரிடம் சென்றார்கள். பாண்டவர்களும் தங்கள் இடத்தை அடைந்து மிகவுஞ் சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள்.

அரக்கு மாளிகையில் பாண்டவர்கள் இறந்திருப்பார்கள் என்று துரியோதனாதியர்கள் எண்ணி யிருந்தார்கள். ஆனால் திரௌபதையின் சுயம்வர மண்டபத்தில் அவர்களைக் கண்டதும், அவர்கள் பொறுக்கொணாத் துன்பம்

அடைந்தார்கள். துரியோதனன் மேலு மேலும் சிந்திக்க லானுன். "பாண்டவர்கட்குத் துருபதனுடைய நட்புக் கிடைத்துவிட்டது. கிருஷ்ணன் அவர்கள் பக்கல் சார்ந்து நிற்கின்முன். மற்றும் அரசர்களும் அவர்களுக்கு உதவி புரி பவர்களாகவே காணப்படுகின்முர்கள். ஆகவே பாண்டவர் களுக்குப் பலம் அதிகப்படுகின்றது" என்று எண்ணினுன் அரவக்கொடியோன். கர்ணன் இதைக்கேட்டதும், பின்வரு மாறு சொல்லித் தேற்றினுன். "பாண்டவர்களைக் கொல்ல எற்படுத்திய சூழ்ச்சியெல்லாம் வீணுயினது. பீமனை விஷம் இட்டுக் கொல்ல எண்ணியது பயனற்றுப் போயிற்று. அரக்குமாளிகை கட்டி அழியச்செய்ய நினைத்ததுப் பாழா யினது. அதனுல் இவ்விதமான சூழ்ச்சிகளெல்லாம் பயனற்றனவே ; யான் சொல்வதைக் கேட்டால், ஒருவாறு வெற்றி அடையலாம். சமாதானமாக காரியங்களைச் செய்ய வேண்டும். அடுத்த சிற்றரசர்களை ஒன்று சேர்த்து அவர் களிடத்தில் 'துருபத மன்னன் மிகுந்த பராக்கிரமசாலியாக விளங்குகின்முன். அவன் ஆற்றலை அடக்க வேண்டும்' என்று கூறி அன்னேர்களை நம்மோடு சேர்க்கவேண்டும். அப்போது அம் மன்னன் பயந்து அடங்கி விடுவான். இவ்விதம் செய்யாது பாண்டவர்களைப்பற்றிப் பெரிதாகச் சொல்வதால், நாம் நம்மையே தாழ்த்திக்கொள்கிறேம். நம்மைப்பற்றி நமக்கே நம்பிக்கை வேண்டியது. நமது விடா முயற்சியாலும் ஊக்கத்திஞலும் நாம் வெற்றி யடைவோம் என்பது உறுதி. கோழைநெஞ்சு படைத்தவர்கள் ஒரு நாளும் முன்னேற மாட்டார்கள். எதையும் நாம் மிகவும் தைரியத்தோடு எதிர்க்க வேண்டும். நம் எதிரிகள் மிக்க பலமுடையவர்கள் என்று எண்ணுதலே கூடாது. அவ் வெண்ணமே நம்மைத் தாழ்த்திவிடும். அவர்கட்கு ஒரு

விதமான பலம் இருக்கிறதென்று யான் நம்பவில்லை. கண்ணன் ஒரு அவதார மூர்த்தி என்று எண்ணுவது தவறு. கடவுளின் அவதாரம் ஆனால் பட்சபாத முடையவராக இருக்க நியாயம் இல்லை. அவ்விதமான நினைப்பே இழுக்கம் தரும். ஆதலால் இனி இவ்வாறு எண்ணுகின்ற எண்ணங்களை விட்டுத் துருபதனை எதிர்த்து அவனைத் தோற்கடிக்க வேண்டிய முயற்சி செய்வோம். அப்போது பாண்டவர்கள் வலிகுன்றும். அவர்கள் நம்மைச் சரணம் அடைவார்கள்'' என்று கர்ணன் மொழிந்தான்.

இந்த சூழ்ச்சியே நல்லதென்று துரியோதனாதியர்கள் மெச்சினார்கள். திருதராட்டிரனுக்கு இதில் நம்பிக்கையில்லை. இது கௌரவர் அழிவுக்குக் காரணமாகும் என்று எண்ணினான். ஆலோசனைக்காக பீஷ்மரையும் விதுரனையும் அழைத்துவரும்படிக்கட்டளையிட்டான். அவ்விருவரும்வந்ததும், நடந்த காரியங்களைச் சாங்கோபாங்கமாய்த் தெரிவித்தான். அவர்கள் இந்த ஆலோசனையை ஒப்புக்கொள்ளவில்லை. இதை மறுத்து "பாண்டவர்களை அழைத்து அவர்கட்கு உரிமையாகவுள்ள பாகத்தை அளித்து ஒற்றுமையாக வாழ்வதே மேல்'' என்றார்கள். துரோணரும், "இதுவே சரி'' என்றார். கர்ணன், வெகுண்டு, "வயது சென்றவர்கள் இங்ஙனமே கூறுவார்கள். அவர்கள் தாங்கள் சேர்ந்த கட்சிக்காரர்களின் நன்மையைத் தேடவே மாட்டார்கள்'' என்றான். துரோணர் இதைக்கேட்டு மனம் உளைந்து, "கர்ணனே, நீஒருவன் தான் துரியோதனனுக்கு நன்மையை நாடுபவன். நாங்களெல்லோரும் அவனுக்குத் தீமையை விளைவிப்பவர்களே. நீ சொல்லியபடி கேட்டு நடந்தால், போர்வராது தடுப்பாருண்டோ'' என்று கூறினார். அவர் கூற்று உண்மையாகவே ஆயிற்று. யாவரும் இதை ஒப்புக்கொண்டார்கள். திருத

ராட்டிரனும் இணங்கினன். உடனே விதுரனை பாஞ்சால தேசத்திற்கு அனுப்பி பாண்டவர்களை வரவழைத்தான். அவர்கட்குரிய பாதி இராச்சியத்தை ஏற்பித்தான். அன்னார் இந்திரப்பிரஸ்தம் என்ற ஒரு நகரை நிருமித்துத் தலைநக ராக்கி ஆண்டுவந்தார்கள்.

இவ்வாறு காலஞ்செல்ல, ஒருநாள் நாரதர் பாண்டவர் களிடத்தில் சென்று இராஜசூய யாகம் செய்யும்படிக் கூறி னார். அவ்வாறு செய்தால் இறந்தவர்கட்கு நற்கதி கிடைக் கும். கண்ணனும் இதை ஒப்புக்கொள்ள, பாண்டவர்கள் வேண்டிய ஏற்பாடுகள் செய்தார்கள். உடனே திக்கு விஜயஞ் செய்து அரசர்களை வென்றார்கள். அவர்களில் ஜராசந்தன் ஒருவன். இவன் பிறந்தவுடன் இரண்டு பாதி உருக்களாகக் கிடக்க, இவன் பிதா இவனை ஊரின் புறத்தே எறியக் கட்டளை யிட்டார். அந்த ஊர் காக்கும் அரக்கி, சரை என்பவள் ஆகாரத்தின் பொருட்டுத் திரிந்து வருகையில் அவ்விடம் கிடந்த இரண்டு துண்டங்களை எடுத்துச் சந்தி செய்தனள். உடனே இவ்விரு பிளவுகளும் ஒன்றுபட்டு ஒரு குழந்தை யுருவாய் அழத்தொடங்கியது. இதைச் சரையாலறிந்த அரசன் எடுத்துச் சென்று சரை யால் சந்திக்கப்பட்டவன் ஆதலால் சராசந்தன் எனப் பெய ரிட்டு வளர்க்க வளர்ந்தான். சராசந்தன் அநேக அரசர்களை வென்று அவர்களைச் சிறையிலிட்டுக் காளிதேவிக்குப் பலி கொடுக்க எண்ணியிருந்தான். இவனிடம் கண்ணன், வீமன், அருச்சனன் மூவரும் வேதியர் உருக்கொண்டு சென்று யுத்தபிச்சை யாசித்தனர். சராசந்தன் அதற்கு இசைந்து வீமனுடன் மல்லயுத்தஞ் செய்கையில் கண்ணன் புல்லைப் பிளந்து வீமனறிய இருபுறம் எறிய, அந்த அடையாளத்தால் காலைக் கிழித்து இருபுறம் தலை கீழாக எறிந்து வீமன்

அவனைக் கொன்றான். பின் சிறையிலிடப்பட்ட அரசர்களையும் முனிவர்களையும் வெளிப்படுத்தினார்கள்.

இராஜசூய யாகத்திற்கு முன்னதாக அரசர்களை வென்றார்கள். பின் யாகத்திற்கு வேண்டிய காரியங்களைத் தயாரித்தார்கள். உற்றார் உறவினர் முதலியோர் வந்திருந்தனர். உரிய நாளில் யாகம் தொடங்கப்பட்டது. இதில் கௌரவர்களுக்கு உரிய வேலைகள் கொடுக்கப்பட்டன. துரியோதனன் சிற்றரசர்களிடத்திலிருந்து வருகிற வெகுமதிகளைப் பெறத் தீர்மானிக்கபட்டனன். தருமருக்கு இருந்த செல்வாக்கு நன்கு வெளியாயிற்று. இதனால் அரவக்கொடியோன் அழுக்காறு அடைந்தான். தருமபுத்திரர்களை ஒன்றும் கொடாதபடி நாட்டை விட்டுத் துரத்த வேண்டுமென்று எண்ணி சகுனி முதலானவர்களுடன் ஆலோசனை செய்தான். சகுனி துரியோதனனுக்குத் தாய் கூடப்பிறந்த மாமன் ஆகும். "பாண்டவர்களை சூதாட்டத்திற்கு அழைக்கவேண்டும். அதனால் அவர்களை வெல்லலாம்" என்று உரைக்க யாவரும் ஒப்புக்கொண்டனர்.

வேள்வி முடிந்ததும் அரசர்கள் அவர் அவர் இடம் சென்றார்கள். திருதாட்டிரனும் தன் நகரத்திற்குச் சென்றான். அப்போது துரியோதனன் மயன் என்பவனால் நிருமிக்கப்பட்ட ஒரு சபா மண்டபத்தை வந்து காணும்படி பாண்டவர்களை வேண்டினான். பாண்டவர்களும் சம்மதித்து அத்தினபுரம் சென்றார்கள்.

"ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்."

என்ற மறைமொழி இவர்களிடத்தில் உண்மையாயிற்று. பெரிய விருந்து முடிந்ததும், சபா மண்டபத்தை அடைய,

அதன் அமைப்பையும் விசித்திரத்தையும் கண்டு வியந்தார்கள். பின் விளையாடும் மண்டபத்தை அடைய, சகுனி தருமரை விளையாட்டாக சூதாட அழைத்தான். சூழ்ச்சி ஒன்றும் அறியாத தருமர் அதற்கு ஒப்புக்கொண்டார். மந்திரி பிரதானிகள் சூதாட்டத்தால் வரும் கேடுகளை எடுத்துரைத்தும், 'விதி வழி மதி செல்லும்' என்பதுபோல், ஒன்றையும் மனத்திற் கொள்ளாராகி விளையாடலாயினர்.

"ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கு முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு."

"வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று."

"இழத்தொறூஉம் காதலிக்கும் சூது."

"அறத்தை வேர் கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ என்றூர் தெரிந்து."

"உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானஞ் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து."

இவ்வாறு சூதினல் வருங் கேடுகளை நன்கு எடுத்துரைத்தும், ஒன்றையும் மனத்திற் கொள்ளவில்லை. சூதாட்டத்திற்கு இசைந்து ஆடத் தொடங்கினர். முதலாவது விளையாட்டாக ஆடினார்கள். பின் சிறு பந்தயம் வைக்கலாயினர். இவ்விதமாக பந்தயத்தில் நாடு நகரங்களை யெல்லாம் தருமர் இழந்தார். பின் தன் மனைவியைப் பந்தயமாக வைத்து அவளையும் தோற்றார். உடனே துரியோதனன் திரௌபதியை துச்சாதனனைக் கொண்டு இழுத்துவரச் சொல்லி சபையில் துகில் உரியச் செய்தான். அதில்

அவளுக்கு மானபங்கம் நேராதபடி பரமாத்மா ஆடை அளித்துக்கொண்டே யிருந்ததினால் துச்சாதனன் கை சோர்ந்து கீழே விழுந்தான். அதில் பீமன் முதலியோர் ஒவ்வொரு விதமாக சபதம் செய்தார். திரௌபதை தன் விரித்த கூந்தலை துச்சாதனனின் இரத்தம் தோய்த்து முடிப்பதே தவிர அதற்கிடையில் முடிப்பதில்லை எனச் சபதம் செய்தாள். அவிழ்த்த கூந்தலுடையவளாய் அலைந்து திரிந்தாள். வீமன், "துச்சாதனனை வன்கொலை புரிந்து அவன் உரம் பிளந்து உதிரம் குடிப்பது சத்தியம்" என்றும், "துரியோதனனைக் கதையால் கொன்று அவன் தலையை இடக் காலால் பொடிபட அரைத்தொழிப்பதுஞ் சத்தியம்" என்றும் சபதம் செய்தான். அருச்சுனன், நகுலன், சகாதேவன் முதலியோர்களும் ஒவ்வொரு விதமாகச் சபதஞ் செய்தார்கள்.

கடைசி ஆட்டமாக தோற்றவர்கள் 12 ஆண்டு காட்டில் திரியவும், ஒருவருடம் ஒருவரும் அறியாதபடி நாட்டில் மறைந்துறையவும் என்றுள்ள பந்தயத்தை வைத்து ஆட, தருமரே தோல்வி அடைந்தார். மறைந்துறையும்போது, யாராவது கண்டுபிடித்தால் மறுபடியும் 12 வருடம் காட்டிற் குச் செல்லவேண்டும். இந்தப் பந்தயத்தில் பாண்டவர்கள் தோற்க நாடு நகரங்களை யெல்லாம் விட்டுவிட்டுக் காட்டில் வாழச் சென்றார்கள். திரௌபதியும் கூடவே சென்றாள். அனிச்சப் பூவையும் அன்னத்தின் இறகையும் பழிக்கக் கூடிய அவ்வளவு மிருதுவான அடி இப்போது கல்லு முள்ளும் தைக்க காட்டில் நடந்துசெல்லலாயிற்று. காட்டில் காய்கனிகளுக்காக அங்கும் இங்கும் அலைந்து திரிந்தார்கள்.

பாண்டவர்கள் காட்டில் அலைந்து திரிய, துரியோதனாதியர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்துவந்தார்கள். அவர்

கள் தங்கள் துன்பம் எல்லாம் ஒழிந்தது என்று எண்ணின வர்களாய், கவலையின்றி வாழ்ந்தார்கள். இனி எல்லாம் தம் முடையதே என்று இறுமாந்தார்கள். "பாண்டவர்கட்கு இனி உய்தில்லை. காட்டில் கஷ்டப்பட்டுக் கவலையினால் கடைசி காலத்தை அடைவார்கள். ஒருவேளை காட்டு வாழ்க்கையை முடித்து நாட்டுவாழ்க்கையில் மறைந்து உறையும்போது அவர்களை நாம் எளிதாய்க் கண்டுபிடிக்க லாம். பின் அவர்கள் மறுபடியும் 12 வருடம் அடவியை அடையவேண்டியதுதான். அந்தக் காலவரம்பு முடிவதற்கு முன்னாக அவர்கள் இறுதியை அடைவது உறுதி. ஆத லால் பாண்டவர்கள் படவேண்டியதே தவிர ஈடேறும் பான் மையில்லை" என்று எண்ணி இறுமாப்போடு காலங்கழித் தார்கள்.

துரியோதனன் இதனோடு திருப்தி அடையவில்லை. தன் எதிரிகளின் வாழ்க்கையை இன்னும் அதிகக் கஷ்ட மாக்க வேண்டுமென்று எண்ணங்கொண்டான். எரிகிற நெருப்புக்குக் காற்று உதவிசெய்கிறதுபோல் துரியோ தனன் கருத்தைக் கர்ணன் வந்து கூடுதலாக்கினான். கர்ணன் துரியோதனனிடத்தில் வந்து, "இளவரசே! இப்போது அரசர்கள் எல்லோரும் தங்கட்குக் கீழ் அடங்கினவர்களே. தங்கள் கருத்துக் கிசைய அவர்கள் நடப்பார்கள் என் பதற்கு ஐயமில்லை. இதனால் மகிழ்ச்சி அடைவதை விட வேறே ஒரு சிறந்த மகிழ்ச்சி அடையவேண்டும். பாண்டவர்கள் துவைத வனத்தில் மிகவும் வறுமைப் பட்டு வாழ்ந்து வருகின்றார்கள். அன்னோர் முன் யாம் நமது பரிவாரங்களோடு அலங்காரத்துடனும் ஆடம் பரத்துடனும் நின்றால், அவர்கள் வருத்தம் அதிகப்படும். அதனால் அவர்கள் இறக்கவுங் கூடும். நமது பணத்தினு

டைய மதிப்பையும் ஆள் சுவாதீனத்தையும் நமது எதிரி களிடத்தில் காண்பித்து அதனுல் அவர்கள் படும் துன்பத் தைக் கண்டு ஆனந்தம் அடைவதே நமது மனதுக்கு ஒரு ஊக்கமாகும். அதனுல் யாம் யாதாம் ஒரு காரணத்தைச் சொல்லிக் காட்டிற்குச் செல்லுவோம். அங்கு துரோபதை கௌரவர்களின் மனைவிமார்களின் ஆடை அலங்காரங்களைக் கண்டு மிகவும் மனவருத்தமடைந்து, தன் கணவன்மார்களை வெறுத்துக் கூறுவாள். அதனுல் ஒருவேளை அவர்களைவிட்டு நீங்கவும் கூடும். தான் அறியாது இவ்வாறு இவர்களுக்கு மாலையிட்டதைப்பற்றி வருந்துவாள். நமது பகைவர்கள் படுகிறபாடுகளைக் கண்டு ஆனந்திப்பதே பேரானந்தமாகும்'' என்ருன்.

"நண்ப! நீ மொழிந்தது உண்மை. மிகவும் மெச்சி னேன். ஆனுல் என் தகப்பனுர் என்னைக் காட்டிற்கு அனுப் புவதே ஐயமாகின்றது. பாண்டவர்கள் அந்த வனத்திற்கு வந்திருப்பது தெரியும். அவர்களைப்பற்றி அவருக்குப் பயம் உண்டு. அவர்களையே எப்பொழுதும் புகழ்ந்து பேசு வார். அன்னோர்களின் போராண்மையை மெச்சுவார். விதுர னிடத்தில் ஆராயாது ஒரு காரியமும் செய்யமாட்டார். விதுரன் ஒருக்காலும் சம்மதிக்கமாட்டான். அதனுல் இதற்கு ஒரு தகுந்த உபாயம் கண்டுபிடிக்க வேண்டும்'' என்று துரியோதனன் கூறினுன்.

உடனே கர்ணன் சகுனியிடத்திற் சென்று விஷயத் தைக் கூற, சகுனியும் அவன் கூறியதைக் கேட்டு மெச்சி, ஒரு தந்திரம் சொல்லிக்கொடுத்தான். தங்களுடைய பசுக் கள் துவைத வனத்தில் இருப்பதாகவும் அவைகளைப் பார்க் கப் போவதாகவும், மாடு மேய்ப்பவர்கள் வன விலங்கு களின் தொந்தரவு இருக்கிறதைத் தெரிவித்ததாகவும்

சொல்லி வனத்திற்குச் செல்லலாம் என்று சொல்லிக் கொடுத்தான்.

கர்ணன் இந்த சூழ்ச்சியைக் கேட்டு துரியோதன னிடத்தில் தெரிவிக்க, அவனும் அதை ஒப்புக்கொண்டு, ஒரு இடையனை அழைத்து அவனிடத்தில் தன் தந்தை யிடத்திற் சென்று சொல்லவேண்டுவனவற்றைச் சொல்லிக் கொடுத்தான். அவைகளைக் கேட்டு அக்கோபாலன் அர சரின் முன் சென்று, சாஷ்டாங்கமாக வணங்கி, "மகா ராஜா! நம்முடைய பசுக்களுக்கு ஒருவித குறைவுமில்லை. நல்லவிதமான புல் கிடைக்கின்றது. அதனால் பால் நிரம்பத் தருகின்றன. ஆனால் துஷ்ட மிருகங்களின் இன்னல்கள் பொறுக்கமுடியவில்லை. சிறிது நாளைக்கு முன் ஒரு வேங்கை வந்து பத்துப் பசுக்களைத் தின்று விட்டன. இரண்டு நாட்களுக்கு முன் ஒரு புலி வந்து ஒரு பசுவைப் பிடிக்க, அப்போது என் பையன் அதட்ட, உடனே அவன்மேல் பாய்ந்து அவனைக் கொன்றுவிட்டது. இவைகளினால் நமது பசுக்களுக்கு அழிவு நேர்ந்துள்ளன. அதனால் மகாராஜா அவர்கள் திருவுளங்கொண்டு எங்கட்கு வேண்டிய உதவியை அளிக்க வேண்டிக்கொள்கிறேன்" என்று கல்லுங் கரையும்படிக் கூறினான். இதைக் கேட்டுக் கொண்டிருந்த கர்ணன் துரியோதனனை அனுப்பலாம் என்று மொழிந்தான். அதற்குப் பிறவிக்குருடரான திரு தராட்டிரர், "துரியோதனனை அனுப்புவது தகுதியில்லை. அவன் சிறு பையன். மேலும் அவ்வனத்தில் பாண்டவர் கள் வசித்து வருகிறார்கள். அவர்கள் தங்கள் தபோபலத் தால் துரியோதனனை எரிக்கவும் கூடும். அருச்சுனனோ இப்போது பாசுபதாஸ்திரம் பெற்று மிகவும் ஆற்றல் படைத்தவனாக இருக்கின்றான். பீமனுடைய வல்லமை

யைச் சொல்லவேண்டியதில்லை. அதனால் வேறு யாரை யாவது அனுப்புகிறேன்" என்று கூற, கர்ணன் சிறிது வருத்தமடைந்தான்.

உடனே சகுனி எழுந்திருந்து, "மகாராஜா! அதைப் பற்றிக் கவலைவேண்டாம். தாங்கள் சொல்லுகிறபடி ஒன்றும் நடவாது. பாண்டவர்களிடத்தில் நமக்கு ஒன்றும் இல்லை. பசுவைக் காப்பாற்றவேண்டிச் செல்லுகிறோமே தவிர பாண்டவர்களிடத்தில் போர்புரிவதற்கன்று. மேலும் பாண்டவர்கள் சத்தியமுள்ளவர்கள். அவர்கள் சத்தியத்தினின்றும் தவறமாட்டார்கள். அதனால் தாங்கள் சம்மதம் கொடுப்பதில் ஒருவித கேடும் இல்லை" என்று கூறினன்.

உடனே திருதராட்டிரர் சம்மதங் கொடுக்க, வேட்டைக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து அன்றைக்கு மாலையிலேயே புறப்பட்டார்கள். மிகவும் ஆடம்பரத்தோடும், குதூகலத்தோடும் மணக் காட்சிக்குப் போவதுபோலச் சென்றார்கள். வேட்டைக்காரர்களும் நாய்களும் முன்னே செல்ல, துரியோதனன், கர்ணன், மற்றுமுள்ள இளவரசர்களும் தங்கள் இராணிமாரோடு நான்கு குதிரை கட்டிய இரதங்களில் புறப்பட்டார்கள்.

காட்டிற்குச் சென்று கூடாரங்கள் ஏற்படுத்தி அவர் அவர்க்கு உரிய இடத்தில் அமைந்தார்கள். பசுக்களைப் பார்வை யிட்டுவிட்டு, துவைத வனத்திலுள்ள தடாகத்தில் தண்ணீர் அருந்த வந்தார்கள். அந்தத் தடாகத்தைக் கந்தருவர்கள் பரிபாலித்து வந்தார்கள். துரியோதனன் சில தூதர்களைத் தடாகத்திற்கு அனுப்பினான். அவர்களைக் கந்தருவர்கள் குளத்தில் இறங்கச் சம்மதிக்கவில்லை. உடனே அவர்கள் திரும்பி வந்து செய்தியை அறிவித்தார்கள். துரியோதனன் மிக்க கோபங்கொண்டு தன் வீரர்

களை அனுப்பினன். வீரர்கட்கும் கந்தருவர்கட்கும் போர் நிகழ்ந்தது. அதில் அரவக்கொடியோன் ஆட்கள் தோற்றுப்போக புறங்காட்டி ஓடிவந்து முறை யிட்டார்கள். துரியோதனன் கர்ணனைக் கூட்டிக்கொண்டு சென்றான்.

கந்தர்வ அரசனாகிய சித்திரசேனனுக்கும், துரியோதனனுக்கும் ஒரு பெரும் போர் நிகழ்ந்தது. இரு கட்சிக்காரர்களும் கடுமையாய் அமர் ஆடினார்கள். கர்ணனின் தேர் சின்னபின்னமானதும் உடனே வேறே ஒரு தேரில் ஓடிவிட்டான். பின் துரியோதனன் தேர் முறிந்ததும், துரியோதனன் கீழே விழுந்தான். உடனே சித்திரசேனன் துரியோதனனைக் கட்டி அவன் இடத்திற்குக் கொண்டு போனான். மற்றுமுள்ளவர்கள் அரவக்கொடியோன் படை வீரர்களையும் பெண்களையும் பிடித்துக்கொண்டு போனார்கள்.

துரியோதனன் வேலைக்காரர்கள் உடனே உதிட்டிரனிடத்தில் ஓடிச் சென்று செய்தியைத் தெரிவித்து தங்கள் அரசனைக் காப்பாற்ற வேண்டினார்கள். தருமர் மிகவும் தயை உடையவராதலால், தன் தம்பிமார்கள் இவ்வாறு துன்பப்படுகின்றார்கள் என்பதைக் கேட்டு உடனே தன் சகோதரர்களை அனுப்பினார். அவர்கள் சித்திரசேனனை ஜெயித்து அவர்களைச் சிறையினின்றும் மீட்டார்கள். துரியோதனன் இந்த அவமானத்தை எண்ணி எண்ணி மனம் நொந்தான். என்ன செய்வான்! தான் அழிக்க வேண்டுமென்று எண்ணியிருந்த அப்பகைவர்களால் தனக்கு கதி 'கிடைத்ததைப்பற்றி, அவன் கொண்ட வருத்தத்தை அளவிட்டுரைக்கலாமோ!

இந்த அவமானத்தைப் பொறுக்கலாற்றாது வடக்கிருந்து உயிர் துறக்க வேண்டுமென்று எண்ணினான்.

கர்ணனும் உறவினரும் அவனைத் தடுக்க, அவன் அதற்கு ஒருப்படாது இருந்தனன். பின் தருமபுத்திரர் துரியோதனனையும் அவன் வீரர்களையும் அவர்கள் ஊருக்கு அனுப்பினர். மறுநாட் காலையில் கர்ணன் வந்து, துரியோதனனைப் பார்த்து, "அரசே! தாங்கள் இவ்வாறு எண்ணங்கொள்ளுவது தவறு. தாங்கள் இறந்தால் தங்கள் பகைவர்களுக்கென்ன? தாங்கள் இருந்தால் அல்லவா பகைவர்களை வெல்லலாம்? அஃதல்லாமல் தாங்கள் இறக்கத் துணிவது சிறந்ததன்று. இவ்வுலகை நீத்தால், தங்கள் குலத்தார்க்கு ஒரு பெரும் பழிச்சொல் கிடைக்கும். அதனால், இனி இத்தகைய எண்ணத்தை விட்டு விடுக" என்று வேண்டினான். இவ்விதமான மொழிகள் துரியோதனனுக்கு ஒரு பெரிய ஊக்கத்தை அளித்தது. அன்றுமுதல் அவன் தன் வருத்தத்தை வெளிக்காட்டாது தைரியத்தோடு இருந்தான்.

## IV

கர்ணன் தன் நாட்டை நீதியுடனும் முறையுடனும் ஆண்டு வந்தான். அப்போது தன்னிடத்தில் வந்து பிராமணர்கள் எது கேட்டாலும் கொடுக்கிறதாகவும், ஏழை, தனவந்தன், இளைஞன், வயசன், யாரும் இடுக்கண் உற்ற இடத்திலும் அவருக்குத் தன்னால் இயன்ற உதவி புரிவதாகவும் உறுதி செய்துகொண்டான். எந்தக் காரணத்தினாலும் இவ்விரதத்தினின்றும் தவறுவதில்லை என்று திடப்படுத்தியிருந்தான்.

இந்தச் சமயத்தில் இந்திரன் தன் மகன் அருச்சுனனுக்கு வேண்டிச் சில காரியங்கள் செய்ய எண்ணங் கொண்டான். கர்ணன் பிறக்கும்போது கூடப் பிறந்த

கவசகுண்டலங்கள் அவனுக்கு உற்ற துணையாக இருந்தன. அவைகள் அவன் மெய்யில் இருப்பது வரைக்கும் ஒருவரும் அவனை வெல்ல முடியாதென்பது ஒருதலை. அதனால் அம்மெய்க் கவசத்தையும் குண்டலங்களையும் தந்திரமாகப் பெறவேண்டுமென்று நினைத்தான்.

இவ்வித நினைவு கர்ணன் தந்தையாகிய சூரியனுக்குத் தெரியவந்தது. தன் மகனை இதில் மிகவும் கவனமாக இருக்கும்படிச் சொல்லவேண்டுமென்று நினைத்து, ஒரு பார்ப்பன வேடம் பூண்டு சூதசுதனிடத்தில் வந்து, "அரசே! உங்களிடத்தில் ஒரு உற்ற காரியம் அறிவிப்பான் வந்திருக்கின்றேன்" என்றான்.

கர்ணன் விஷயம் யாதென்று கேட்க, சூரியன், "இந்திரன் பாண்டவர்கள் சகாயனாக விளங்குகின்றான். அவர்கட்கு வேண்டிய காரியங்களைச் செய்ய கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறான். தங்களிடத்தில் உள்ள கவச குண்டலங்களைப் பெற இந்திரன் எண்ணங்கொண்டிருக்கிறான். தாங்கள் வேதியர்கட்குக் கேட்டதெல்லாம் கொடுப்பதாக உறுதிபண்ணியிருப்பதை அறிந்து அந்தண வடிவங்கொண்டு வந்து கவசகுண்டலங்களைப் பெறுவான். மெய்க் கவசத்தையும் காதணிகளையும் இழக்கப்பெற்றால், எல்லா வல்லமையும் தங்களை விட்டு நீங்கும். ஆதலால் கவனமாயிருக்கவேண்டும்," என்று கூறினான்

கர்ணன்:—"தங்களுடைய பெயரென்ன? இவ்விதமான உபதேசம் கொடுக்கவந்த நீங்கள் யார்?"

சூரியன்:—"யான் சூரியன். உன்மேல் எனக்கு அன்பு அதிகம். அன்பு மேலீட்டால் இக்காரியம் கூற வந்தேன்."

கர்ணன் :—"தாங்கள் இவ்வளவு கஷ்டப்பட்டு இங்கு வந்ததற்கு யான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். ஆனால் எக்காரியத்தை உத்தேசித்து வந்தீர்களோ, அக்காரியம் கைகூடாது. சொன்னசொல் தவறுவது சிறந்ததன்று. யான் மறையோர்கட்கு மறுத்துக் கூறாது எதையும் கொடுப்பதாக உறுதிசெய்தாயிற்று. அதினின்றும் திரும்புதல் முறையன்று. அரிச்சந்திரன் சத்தியத்தை நிலைநாட்ட அவன் பட்டபாடு தெரியாதா? இராமன் தன் தந்தை சொல்லைக் காப்பாற்றுதற்காகக் காட்டுக்கேகவில்லையா? என்ன துன்பம் வந்தாலும், யான் இவ்வுறுதியினின்றும் தவறமாட்டேன்."

சூரியன் .—" இருந்தாலும், பிராமண வேடந் தரித்த ஒருவனுக்குக் கொடுப்பது கூடாது. உண்மையான மறையோனுக்குக் கொடுப்பதில் குற்றங் கூறவில்லை. காவி வஸ்திரம் தரித்தவர்களெல்லாம் பண்டாரமாவார்களா? கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமா? உருத்திராட்சப் பூனைகளைக் கவனிக்கவேண்டும். வேடதாரிகளுக்குக் கொடுப்பதையே யான் குறை கூறுகிறேன். அதனையே எச்சரிக்கை செய்ய வந்தேன்."

கர்ணன் :—"தேவனே? இந்திரன் ஆயிரம் யாகங்களைச் செய்து அப்பதவியைப் பெற்றிருக்கிறான். இத்தகைய மேலோன் எனக்குப் பயந்து வேடம் பூண்டு வந்து இரந்தால், கொடுப்பதில் என்னதடை. அதனால் அவனுக்குத்தான் குறைவு. எனக்கு அதனால் சாவு ஏற்பட்டாலும் அதைப் பொருட்டாக நினைக்கவில்லை. பொன்றுதல் ஒருகாலத்தும் தவிராது.

ஆறினும் சாவு, நூறினும் சாவு என்பது உண்மை. ஆனால் புகழுக்கு இறுதியில்லை.

'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதிய மில்லை உயிர்க்கு.'
'ஒன்றா உலகத்துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்ப தொன்றில்.'
'ஈயென இரத்தல் இழிந்தன்று ஈயேன்
என்றல் அதனினும் இழிந்தன்று கொள்ளெனக்
கொடுத்தல் உயர்ந்தன்று.'

இத்தகைய மூதுரைகளை மறந்து வாழ்வது தகுதியோ. ஆதலால் இந்திரன் வந்து கேட்டால், இல்லை என்று சொல்ல மாட்டேன்.''

சூரியன் :—''கர்ணா ! நீ ஒரு களங்கமற்றவன். வெளுத்த தெல்லாம் பாலென்று நினைக்கக் கூடியவன். நன்மை இது, தீமை இது என்று உணருந் தன்மை இல்லாத வன். உலகியல்புகளை நன்கு உணராதவன். இசைபட வாழ்தல் இன்றியமையாததே. அதற்காக உன் உயி ரையும் உற்றாரையும் விணாக்குவது நல்லதா ? சற்று ஆராய்ந்து பார். உயிர் இருக்கும் போதே புகழடை வது நல்லதா ? உயிரைக்கொடுத்துக் கீர்த்தி சம்பாதிப் பது சிறந்ததா ? முடிசார்ந்த மன்னரும் முடிவி லொரு பிடிசாம்பரான பின் புகழ் உனக்கு எதற்கு ? இஃதெல்லாம் உனக்கு உறுதிக்காகச் சொன்னேன். அருச்சுனனும் நீயும் பெரும் விரோதிகள் என்பது உலகறிந்த செய்தி. இக் கவச குண்டலங்கள் உன் னிடத்தில் இருப்பது வரைக்கும் அவனால் ஒன்றும் செய்யமுடியாது. நீ அவைகளை இழந்தால் உயி ரிழப்பது நிச்சயம். இதை நன்கு கவனித்துக் கொள்.''

கர்ணன் :—“தேவனே! தாங்கள் சொல்லியது யாவும் உண்மையே. யான் மறுத்துக் கூறுதலினால் வருத்தம் அடையலாகாது. யான் புகழின் பொருட்டு வாழ எண்ணுகின்றேன். எனக்குப் பரசுராமனும் துரோணாச்சாரியரும் கொடுத்த அஸ்திரங்கள் உள்ளன. அவைகளால் யாரையும் வெல்வேன் என்பது உண்மை. அருச்சுனனால் என்னைக் கொல்ல முடியாது என்பது உறுதி. அதனால் தேவனே! இச் சமயத்தில் என் ஜென்மத்தை வீணாக்க நினையாதீர்கள். யான் இல்லை என்பேனாகில், யான் எடுத்த விரதம் தவறும். அதனால் என்னை ஒருதடவையும் பொறுக்க வேண்டும்.”

இதை யெல்லாம் கேட்ட தேவாதிதேவன் அவன் மன உறுதியைக் கண்டு,

சூரியன் :—“நீ நினைப்பதுபோல் செய். ஆனால் ஒரு காரியம் பெற்றுக்கொள். இந்திரனிடத்தில் ஒரு தனி சக்தி இருக்கிறது. அதை வேண்டிப் பெற்றுக்கொள்.”

இதைக் கூறிவிட்டு சூரியதேவன் மறைந்தான்.

கர்ணனைப்பற்றிப் பாண்டவர்கட்குப் பயம் உண்டு. அவனிடத்தில் காணக்கூடிய கவச குண்டலங்கள் இருப்பது வரைக்கும் அவனை ஒருவரும் வெல்லமுடியாது. மேலும் அவன் ஓர் சிறந்த வில்லாளி. இதை உதிட்டிரர் எப்பொழுதும் நினைத்துக்கொண்டே இருந்தார். இந்திரன் அவர் முன் வந்து தான் சென்று கவச குண்டலங்களை வாங்கி வருவதாகத் தெரிவித்து, வேதியர் வேட மேற்கொண்டு சென்றான். அப்போது அங்கநாட்டரசன் சூரிய நமஸ்காரஞ் செய்துகொண்டு தானம் செய்துகொண்டிருந்தான்.

மகபதி அவனிடம் சென்று தனக்குத் தானம் கொடுக்கும் படிக் கேட்டான். கர்ணன் அவனுக்கு வேண்டியதை எடுத்துக்கொள்ளச் சொன்னான்.

இந்திரன் பாண்டவர்கள் சகாயன் ஆனதால், தனக்கு பொருளோ, நாடோ, அணிகலனோ, விளைநிலமோ, பால் பசுவோ யாதொன்றும் விருப்பமில்லை யென்பதாகவும் தனக்கு வேண்டியது அவன் கூடப்பிறந்த கவச குண்டலங் களை என்பதாகவும் தெரிவித்தான்.

கர்ணன் இந்திரனைப் பார்த்து, “நீ என்ன பைத்தியக் காரனா யிருக்கிறாய்? நல்ல பொருள்களெல்லாம் இருக்க, ஒன்றுக்கும் உதவாத என் கவச குண்டலங்களைக் கேட் கிறாய்? சிறிதேனும் புத்தியில்லை. இவைகளினால் நீ அடை கிற பயனென்ன. இவ்விதமாகக்கேட்கின்ற ஒரு இரவலனை யான் கண்டது மில்லை; கேட்டது மில்லை. இவைகள் என் கூடப் பிறந்தன. அவைகளைவிட்டுப் பிரிவேனானால் யான் இறப்பது திண்ணம். அவைகள் எனக்குப் பாதுகாவலாக அமைந்துள்ளன. இவைகளைத் தவிர வேறே எது வேண்டு மென்றாலும் கேள். இவைகள் என் உயிர்க்கு உறுதியாயுள் ளவை. இவைகள் இறைவனால் அளிக்கப்பட்டவை” என்றான்

இதைக்கேட்டதும், இந்திரன் சிறிது செற்றம் அடைந்தவன்போல நடித்து, “அரசே! உமது தருமசிந்தனை இவ்வளவுதானா? மறையோர்கள் வேண்டியதைக் கொடுப்ப தாக வாக்குறுதி செய்துவிட்டு, இப்பொழுது சாக்குப் போக்குச் சொல்லிப் பின்வாங்குவது நல்லதா? இது வீர னுக்கோ, தருமனுக்கோ அழகா? ‘நல்ல மாட்டுக்கு ஒரு சூடு, நற் பெண்டாட்டிக்கு ஒரு சொல்’ என்பதுபோல அல்லாமல் பிதற்றுவது நியாயமா? உமக்கு விருப்பமில்லை என்று நினைக்கிறேன். அல்லது இவைகளைக் கொடுக்க

முடியாது வறுமை வந்து அடைந்ததா?'' என்று கூறி விட்டு அவ்விடம் விட்டகல்வதுபோல் பாசாங்கு செய்தான்.

உடனே கர்ணன் வேடம் பூண்டு வந்தவன் இந்திரனே என்று உணர்ந்து, "தேவனே! நீ யார் என்பது இப்போது தான் தெரிந்தது. சூரியன் வந்து முன்னமே அறிவு தந் துள்ளான். அதனுல் இத்தகைய பெரியோன் என்னிடத் தில் இரக்கும்போது, யான் மறுக்க அஞ்சுகின்றேன். அதனுல் என் உயிர் போனுலும், யான் கவனியேன். "ஒப் புரவினுல் வருங்கேடனின் அஃதொருவன், விற்றுக்கோள் தக்க துடைத்து'' என்ற குறள் எனக்குக் ஞாபகம் வருகிறது. மகபதீ! எனக்கு தங்களது பேர் ஆற்றலை யான் அடையு மாறு அருள் புரியவேண்டும்'' என்ருன்.

இந்திரன், "கர்ணு! நீ விரும்பியதைப் பெறுவாய். இந்த சக்தியானது என் பகைவர்களைக் கொன்றுவிட்டு என்னிடமே வந்து சேரும். உன் விஷயத்தில், உனது ஒன்னுர்களில் ஒருவனைக் கொன்றுவிட்டு, என்னிடமே வந்து சேரும். இதற்கு ஒப்புக்கொண்டால், இதைத் தரு கிறேன்'' என்று கூறினன். கர்ணன் இந்திரனைப் பார்த்து "என் கவச குண்டலங்கள் போய்விட்டால், அழகிழந்தவ னுவேனே. அதற்கு என் செய்வது'' என்ருன். இந்திரன், "கர்ணு! அதற்காக வருந்த வேண்டாம். உன்னை மிகவும் அழகுள்ளவனுகச் செய்வேன். சூரிய ஒளி மாதிரியாக ஒளி உண்டாகும்'' என்ருன்.

உடனே கர்ணன், கூரிய கத்தி கொண்டு தன் குண்ட லங்களை வெட்டி எடுத்தான். உதிரம் ஒழுகுவதையும் கவ னியாது தன் மெய்க்கவசத்தையும் உரித்து எடுத்தான். இதைக் கண்ட வானவர் எல்லோரும் மலர்மாரி பெய்தார் கள். உலகோர் வியந்தார்கள். குந்தி தேவியின் மக்கள்

குதூகலம் கொண்டார்கள். திருதராட்டிரன் மக்கள் மிகவும் வருத்தம் கொண்டார்கள். இதுமுதல் கொடையில் கர்ணன் என்று புகழப்பட்டான். "கர்ணன் கொடை கொடுப்பதுபோல" என்ற பழமொழியும் ஏற்பட்டது. கொடைக்குக் கர்ணனே எடுத்துக்காட்டாக விளங்குகின்ருன். இத்தகைய கொடையாளி முன்னுமிருந்ததில்லை; பின்னுமில்லை. இனி உலகம் உள்ளளவும் ஒருவன் உண்டாவானே என்பது ஐயமே. "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல, தூதியமில்லை உயிர்க்கு" என்ற மறைமொழிக்கு இலக்காயினன். புகழுடம்பைப் பெற்று என்றும் உலகில் நிலைபெறுகின்ருன். கர்ணனை நினையாதார் யாருமில்லை. இத்தகைய சிறப்பை ஒருவன் பெறுவது அரிது. "செயற்கரிய செய்வர் பெரியர்" என்பது நன்கு விளங்குகின்றது.

## V

பாண்டவர்கள் பன்னிருயாண்டு காட்டில் வாழ்ந்துவிட்டு, ஒரு வருடம் நாட்டில் மறைந்துறைய வந்தார்கள். அப்போது விராட நகரின் அண்மையில் ஒரு வனத்தில் வன்னிமரத்தில் தங்கள் படைக்கலங்களை வைத்துவிட்டு, விராடதேசத்தில் அந்நாட்டரசனிடம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேடம் பூண்டு வேலைக்கு அமர்ந்தார்கள். தருமர் கங்கபட்டர் என்ற பெயரோடு விராட அரசனுக்குக் குருவாகவும், பீமன், பலாயனன் என்ற பெயரோடு மடைத்தொழில் செய்கிறவனுகவும், பார்த்தன் பேடி உருவத்தோடு பிருகந்நளை என்ற பெயரைக்கொண்டு அந்தப்புரத்தில் வேலைக்காரியாகவும், நகுலன் தாமக்கிரந்தி என்ற பெயரோடு குதிரை பரிபாலிக்கிறவனுகவும், சகாதேவன் தந்திரபாலன் என்ற பெயரோடு கோபாலனுகவும், திரௌபதி வண்ணமகளாகவும் அமைந்திருந்தார்கள்.

இங்ஙனம் வாழ்ந்து வருகையில், விராடனுடைய மைத்துனனாகிய கீசகன் வண்ணமகள் பாஞ்சாலியின்மேற் காதல் கொண்டு அவளைப் பலவாறு அவமானப்படுத்த, அவ்வண்ணமகள் பொறுக்கலாற்றாது பீமனிடத்தில் தெரிவிக்க, ஒரு இரவு நடனசாலைக்கு வரச்சொல்லி பீமன் மூலமாகக் கொல்லும்படி செய்தாள்.

இந்தச் செய்தி எங்கும் பரந்தது. இதினின்றும் துரியோதனன் கீசகனைக் கொன்றவன் பீமனாகவே இருக்க வேண்டும் என்று எண்ணி, பாண்டவர்களை அஞ்ஞாதவாசத்தினின்றும் வெளிப்படுத்தி மறுபடியும் 12 வருடம் காட்டிற்கு அனுப்பவேண்டும் என்று மனதில் உறுதிகொண்டான். ஆகவே விராட அரசன்மேல் படை எடுக்கலானான். அங்கேயுள்ள பசுநிரைகளைக் கொண்டுவரத் தன் வீரர்களை அனுப்பினான். இச்செய்தி இளவரசு உத்தரனுக்கு எட்டியது. உத்தரன் விராட அரசனின் மகன். வடதிசையில் துரியோதனன் படைகள் வந்து வளைந்ததைக் கோவலர்கள் அறிவிக்க, உத்தரன் போருக்குப்போக எண்ணங் கொண்டான். அப்போது அவனுக்குத் தேர்ச் சாரதியாக பேடி உருவத்தோடு பிருகந்நளை என்ற அருச்சுனன் அமைந்தான். கௌரவ சேனையைக் கண்டவுடன் உத்தரன் நடுக்கங்கொண்டு அடித்தலம் பிடர் அடித்திட ஓடினான். உடனே அருச்சுனன் அவனைப் பிடித்துக்கொண்டு வந்து தேர்க்காலில் கட்டி, தன்னுடைய உண்மை வடிவத்தை உரைத்து உத்தரனை தேர்ச் சாரதியாக அமைத்துத் தான் போர் புரியத் தொடங்கினான். தனது தேவதத்தம் என்ற சங்கை ஊதிக்கொண்டு துரியோதனன் சேனைகளை எதிர்க்கலானான்.

இந்தச் சப்தம் கேட்டதும் கௌரவசேனை சிறிது கலங்கியது. பீஷ்மன் பாண்டவர்கள் உண்மையை அறிந்தான். துரியோதனாதியர்களிடத்தில் அவர்களை எதிர்க்க வந்தவன்

அருச்சுனனைத் தவிர வேறு ஒருவரும் இல்லை என்று கூறினான். உடனே துரியோதனன், "இன்னும் நாளாகவில்லை. அதற்குள்ளாக பாண்டவர்கள் வெளிப்பட்டு விட்டார்கள். அதனால் இன்னும் 12 வருடம் காடேக வேண்டியது" என்று கூற, வீடுமர் "இந்துவின் இயக்கத்தினால் அவர்கள் காலம் நேற்றே சென்றது" என்று உரைத்தார்.

பின்னர் இரு பெரும்படைகளும் போர் ஆரம்பித்தன. துரியோதனன் முறியடிக்கப்பட்டதும் கர்ணன் வெளிக்கிளம்பினான். கடைசில் கர்ணன் புறங்காட்டி ஓடினான். உடனே அருச்சுனன் கௌரவர்களின் பக்கலிலுள்ள வீரர்களின் தொப்பிக்களையும் அணிகலன்களையும் எடுத்துக் கொண்டு சென்றான்.

மறுநாள் விராடசபையில் பாண்டவர்கள் மாறுவேடத்தை மாற்றிவிட்டு உண்மை வடிவத்தோடு வந்து உட்கார்ந்தார்கள். இதைக்கண்ட விராடன் மிகமகிழ்ச்சிஅடைந்தான். அங்கு குழுமியிருந்த மற்றப் பெரியோர்களும் ஆனந்தம் கொண்டார்கள். யாவரும் இன்புற்று விராடன் மகள் உத்தரையை பார்த்தன் மகன் அபிமன்யுவுக்கு மணம் செய்தார்கள். விராட தேசத்தில் இருந்து பல அரசர்களும் கண்ணனும் சூழ, அவர்கள் ஆலோசனையின்மேல் தங்கட்குச் சொந்தமாக உள்ள பாதி இராச்சியத்தைக் கொடுக்குமாறு அறிவிக்க திருதராட்டினனுக்குத் தூதனுப்ப எண்ணினார்கள்.

பாண்டவர்கள் அனுப்பிய தூதுவன், உலூகன் திருதராட்டிரனிடத்தில் வந்து தான் தூது வந்த செய்திகளைக் கூற, அம் மன்னன் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்ய ஒரு பெரிய சபை கூட்டினான். அவையில் ஒரு பக்கம் வீடுமர், துரோணர், கிருபாச்சாரியர் முதலிய பெரியோர்கள் அவர்

கடகு ஏறபட்ட ஆதனத்தில் அமர்ந்தார்கள். மற்ெருரு பக்கம் கர்ணன், சகுனி, துச்சாதனன் முதலியோர்கள் அமர்ந்திருந்தார்கள். பாண்டவர்கட்குப் பாகம் கொடுப் பதைப்பற்றி வாதம் நிகழ்ந்தது. சிலர் அநுகூலமாகவும், சிலர் பிரதிகூலமாகவும் பேசினர்கள். பீஷ்மர் எழுந் திருந்து, “தர்மபுத்திரர்களுக்கு உரிய பாகத்தைக் கொடுக்க வேண்டியதுதான். அதுதான் முறைமையும் நீதியுமாகும். அவர்கட்கு இட்ட கட்டளைப்படி பன்னீ ராண்டு காட்டு வாழ்க்கையும், ஓராண்டு அஞ்ஞாதவாசமும் நடத்தி யிருக்கிருர்கள். இனிமேல் அவர்களுடைய பங் கைக் கொடாது மறுப்பது அறக் கடவுளுக்குப் பொருந்தா தாகும். ‘அரசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்ரு வதூஉம்’ என்ற கூற்று உண்மையேயாகும். அதனுல் உரிய பாகத்தைக் கொடுப்பதே என் கருத்தாகும்” என்று கூறினர்.

பீஷ்மரின் செம்மொழியைக் கேட்டதும், திருதராட் டிரன் துரியோதனனைப் பார்த்து, “அப்பா! உன் பிதா மகன் கூறுவது சரியே. பாண்டவர்கள் உன்னுடைய சகோதரர்களல்லவா? அவர்கட்கு உரிய பாகத்தைக் கொடுத்து விடுவதே யாவரும் கண்ட செம்மையான நெறி யாகும்” என்று மனமார மொழிந்தான்.

வீடுமர் துரியோதனனைப் பார்த்து, “துரியோதன! பிதா சொல்வதைக் கேட்பதே மேல். உன் தமையன் தம்பி மார்கள் தெருவில் நின்று தவிக்க, நீ இவ்வாறு இறுமாந்து இருப்பது கூடாது. அவர்கட்கு ஏற்பட்ட நாட்டைக் கொடுத்து நீங்கள் இருவீரும் ஒற்றுமையுடன் வாழ் வதே மேலானது. அப்போது பகைவர்கள் உங்களைக் கண்டு பயப்படுவார்கள். ஒற்றுமையில்லாக் குடும்பம் ஒருமிக்கக் கெடும் என்பது அறியாயோ? எல்லாவித காரி

யங்கள் சித்தி அடைவதற்கும் ஒற்றுமையே அவசியம். ஆகையால் நீயும் அவர்களும் சுகமாக வாழுங்கள். வம்புக்குப் போகவேண்டியதில்லை" என்று கூற, துரியோதனன் முகங் கறுத்து, "பாட்டனாரே! நீர் கூறியது உமக்கே பொருந்தும். வேறு ஒருவரும் உமது கொள்கையை ஆதரிக்க மாட்டார்கள்" எனப் பதில் உரைத்தான்.

பீஷ்மர் :—"துரியோதனா! யான் சொல்வது உனக்குப் பொருந்தாது. ஆனால் கர்ணன் போல துன்மந்திரிகள் கூறுகிற கூற்று உனக்கு ஏற்கும். அதனால் நீயும் அழிவை அடைவது திண்ணம். 'நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண், மேற்சென்று இடித்தற் பொருட்டு' என்ற பொய்யாமொழியை மேற்கொள்ளவேண்டும்.

'பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை, பெருகலிற் குன்றல் இனிது.' என்பதைக் கவனித்து நடப்பதே நல்லோர் நடையாகும்."

கர்ணன் :—"ஐயா! பெரியாரே, நீர் கூறியது பொருந்துமோ? என்னை துன்மந்திரி என்று சொல்வதற்கு யான் செய்துள்ள செய்கை யாது? பெரியோராயிருந்தும் பேசுவது பெருந்தன்மைக் கழகாய்த் தோன்றவில்லையே. இதுவரையும் அரசருக்கு அன்புடையவனாக இருந்திருக்கிறேனே தவிர வேறு ஒரு காரியமும் செய்தறியேன். அரசரும் என்னிடத்தில் நன்மதிப்பு வைத்திருக்கிறார்."

பீஷ்மர் :—"கர்ணனே! நீ கூறியது போதும். நீ கூறுவது வீண்வார்த்தைகளே தவிர, உன்னால் ஒன்றும் முடியாது. துரியோதனன் கந்தர்வனால் கட்டுண்ட போது நீ செய்தது யாது? துரியோதனன் வீரர்கள்

விராடனின் ஆநிரையைக் கொண்டுபோன போது, அர்ச்சுனன் அந்நிரையை மீட்ட சமயத்தில் நீ கூட இருக்கவில்லையோ? உன்னால் என்ன காரியம் ஆகும். வெறும் பேச்சே தவிர காரியத்தில் உன்னால் ஆவது ஒன்றுமில்லை. பாண்டவர்களைப் பறக்கடிக்க உன்போன்ற போலியர்களால் ஆகாது.''

துரோணர் :—"மகாராஜ்! பீஷ்மர் கூறியது நியாயமே. கர்ணனை நம்புவதில் பயனில்லை. வில்விஜயன் என்ற பெயர் அர்ச்சுனனுக்கே தவிர வேறு யாருக்கு உண்டு. பாண்டவர்கள் உண்மையிலே மிகவும் ஆற்றல் படைத்தவர்கள். அவர்களை வெல்லுதல் கூடாத காரியம்.''

திருதராட்டிரன் :—"பாண்டவர்கள் பலத்தில் சிறந்தவர்களே. வீமன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் என் உடல் நடுங்குகிறது. அவன் கதாயுதத்திற்கு முன்னால் யார் நிற்க முடியும். அவனோடு அர்ச்சுனன் சேர்ந்திருப்பது தீயின்கூட காற்றுச் சேர்ந்தது போலாம். அதனால், துரியோதனா! வீண் பேச்சுகளைக் கேட்காதே. கர்ணன், சகுனி முதலியோர் உனக்கு நல்லவைகளைச் சொல்லித்தாரார். யான் சொல்லுகிறபடி செய். அப்படியானால் நமக்குச் சேமம் உண்டாகும். நாம் சுகமாய் வாழலாம்.''

துரியோதனன் :—"பிதாவே! எதற்காகத் தாங்கள் பாண்டவர்கள் பெயரைக்கேட்டுப் பயப்படுகிறீர்கள்? தாங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். யான் கர்ணன், துச்சாதனன் முதலியோர்கள் உதவியால் வெற்றி பெறுவேன். வீடுமர், துரோணர் உதவி செய்யாது போனால் போகட்டும். தந்தையே! பாண்டவர்கட்கு ஒரு இஞ்சு இடம் கொடுக்கமாட்டேன் என்பது ஒரு

தலை. இதற்காக தாங்கள் மன்றாடவேண்டாம். ஒரு ஊசி நுழைய இடம் கொடுக்க எண்ணமில்லை.''

திருதராட்டிரன் :—"மகனே! யான் உனக்காக வருந்தவில்லை. உன் பொருட்டு ஏழைகள் வருத்தப்படவேண்டியிருக்கிறதே என்று மிகவும் என் மனம் நோவுகின்றது. பீமன் தன் தண்டால் உன் யானைகளை அடித்து வீழ்த்தும்போதும், அருச்சுனன் தன் காண்டீவம் என்ற வில்லால் உங்களை வீழ்த்தும்போதும் நீ யான் கூறியதை அறிவாய்.

துரியோதனா! யான் சொல்வதைக் கேட்டு முகஞ்சுளிக்காதே. தேவர்கள் எல்லாம் பாண்டவர்கட்கு உதவி செய்யத் துணிந்துள்ளார்கள். தேவர்கள் நியாயத்துக்குக் கட்டுப்பட்டவர்கள். அக்கினி அருச்சுனனுக்கு வில்லும் அம்பும் கொடுத்து உதவி யுள்ளான். யமன், இந்திரன், அசுவினி முதலிய தேவர்கள் பாண்டவர்களையே காப்பாற்றுவார்கள். இவ்விதம் எல்லாம் பல வழியாக பாண்டவர்கட்கு உதவி யிருக்கும்போது, அவர்களிடத்தில் விரோதங் கொண்டு சாடுவது வீணே.

'எண்ணித்துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப(து) இழுக்கு.'

என்ற குறளை மனதில் நன்கு பதித்துக் கொள்.''

கர்ணன் :—"பெரியோரே! எனது குருவின் சாபத்தால் எனது படைக்கலங்கள் எனக்கு உதவா என்று சிலர் பிதற்றுவதைக் கேட்டிருக்கிறேன். அது முற்றிலும் பொய். இப்போது பீஷ்மரும் துரோணரும் எனது வில்லாண்மையைப் பார்க்கவேண்டு மென்றால் பார்க்கட்டும். யான் போர்க்களத்தில் நிற்கும்போது காற்

றுங்கூட கௌரவச் சேனையின்மேல் வீசாதபடி பார்த்துக்கொள்வேன். சிறிதேனும் கௌரவச்சேனை அஞ்சவேண்டியதில்லை.''

பீஷ்மர் :—''ஏ! கர்ணு! நீ சாகத்தான் போகிறாய். அதனால் தான் இவ்வாறெல்லாம் பிதற்றுகிறாய். பாண்டவர்கள் உன் கையால் சாவார்கள் என்று கிஞ்சித்தேனும் நினைக்கவேண்டாம். வார்த்தையினால் பிதற்றாதே. கௌரவர்களில் எல்லாரும் யமலோகம் சென்ற பிற்பாடு உன்னுடைய முறைவரும். இந்திரனால் கொடுக்கப் பட்ட சக்தியால் அர்ச்சுனனைக் கொன்றுவிடலாம் என்று எண்ணுகிறாய். அவனுக்குமேல் வாசுதேவன் இருக்கிறான். ஒருவேளை நாகாஸ்திரத்தால் பார்த்தனைப் படுக்கச் செய்யலாம் என்று எண்ணுவதும் வீண். அதற்குமேல் அரி கருடன்மேல் வந்து அவனைக் காப்பாற்றுவான். கருடனின் நிழல் பட்ட மாத்திரத்தில் அரவம் அடங்கி ஒடுங்கி விடரில் செல்லும்.''

திருதராட்டிரன் :—'' துரியோதனு! எங்கள் வார்த்தையைக் கேள். பீஷ்மர் உன் பாட்டனார்; துரோணர் உன் குரு. இவர்கள் எல்லாம் உனக்குப் பாதகமாக ஒன்றுஞ் சொல்லமாட்டார்கள். உனது சேமத்தையே அல்லும் பகலும் எண்ணிக்கொண்டிருப்பவர்கள். ஆகவே அத்தகையோர்களது மொழிகளை மோசமாக்காதே. தருமபுத்திரருக்குரிய பாதி பாகத்தைக் கொடுத்து விடுவதேமேல்.'' (துரியோதனனின் முகக்குறியைக் கண்டு) திருதராட்டிரன் பின்னுங் கூறுகிறான். '' மகனே! இஃதெல்லாம் விளையாட்டு என்று எண்ணுகிறாய். நீ கஷ்டப்படும் சமயத்தில் யாங்கள் சொன்னதைக் கருதுவாய். இப்போது இவைகள் எல்லாம்

விளையாட்டாகவே இருக்கும். "இளங்கன்று பய மறியாது" என்பது போலக் காணப்படுகிறாய். மேலும் "கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது" என்பது உன்னிடத்தில் நன்கு விளங்குகிறது. "கெடுவான் கேடு நினைப்பான்" என்பது பொய்யாகாது. விராடனுடைய ஆநிரைகளை அருச்சுனன் மீட்ட போது நீ அங்கே இருந்திலையோ? அவனுடைய வன்மையை உணரவில்லையோ? கர்ணன் எங்குற்றான்? அருச்சுனன் ஒருவனாகவே யிருந்து உங்களைப் புறங் காட்டி ஓடச் செய்யவில்லையா? கர்ணன் காலின் வன்மையை அப்போது காணவில்லையா. சித்திரசேனன் உன்னைக் கட்டிக்கொண்டு போனபோது, உன்னை அதினின்றும் விடுவித்தது கர்ணனா பாண்டவர்களா? இஃதெல்லாம் உணர வில்லையா? இவ் வித மெல்லாம் அறிந்திருந்தும் பீமனும் அருச்சுனனும் சேர்ந்து போர் புரியும் சமயத்தில் நீ வெற்றிகொள்வது யாங்ஙனம்? அச்சமயம் அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல நட்பாளர்களைக் காணலாமே. ஏ! கர்ணா! நீ பாண்டவர்களோடு போர் புரிந்து வீரசுவர்க்கம் அடைய எண்ணுகின்றாய். அதற்காக உன்னைச் சேர்ந்தவனைக் கெடுப்பது நல்லதா? உன்னை ஆதரித்த துரியோதனனைப் படுகுழியிற் படுத்துவது பான்மையோ? துரியோதனா! யான் சொல்வதைக் கேள். இன்னும் கெடுவதற்குப் பந்தயம் வையாதே. உரிய நாட்டைக் கொடுத்துச் சுகமே இரு.

கர்ணன்.—(இதைக்கேட்டு மிகுந்த வருத்தங்கொண்டு) "மகராஜ்! என்னை குறைகூறக் காரணம் என்ன? யான் இதுகாறும் நம்பிக்கையற்ற செயல் ஏதாவது செய்ததுண்டா? என்னை நிந்தித்தது தக்கதன்று. இதனால்

நீங்கள் உங்கள் குலத்தாருக்கும் கேட்டைத் தேடிக் கொள்கின்றீர்கள். தாங்கள் இருப்பது வரைக்கும் யான் அமர்க்களத்தை அடையேன் என்பது உறுதி. தாங்கள் போர்க்களத்தை விட்டு நீங்குவது வரைக்கும் யான் எனது வில்லும் அம்பும் எடேன்.''

கர்ணன் இவ்வாறு பேசிக்கொண்டு தன் ஆயுதங்களை எறிந்து விட்டு அவண் நின்றும் அகன்றான்.

பீஷ்மர் :—''துரியோதனா! பார்த்தாயா கர்ணனின் செயலை? இத்தகையோனை நம்பி பாண்டவர்களோடு போர் தொடங்குகின்றாய்? இவன் என்ன செய்வான் என்பது நீதான் அறிவாய். யான் உன் பகைவர்களில் பலரையும் உலகத்திற்கு அனுப்புவேன்.''

துரியோதனன் :—'' பிதா மகனே! யான் உங்கள் உதவியை நாடவில்லை. கர்ணனும் துச்சாதனனும் இருப்பது வரைக்கும் எனக்கு உங்கள் உதவி அவசியமில்லை.'' இதைக் கேட்டதும், திருதராட்டிரன் அவையை விட்டு அகன்று சென்றான்.

## VI

இவ்வாறு சில நாட்கள் சென்றன. கௌரவர்கள் பாண்டவர்களுக்கு ஒன்றும் கொடுப்பதாகத் தெரியவில்லை. கடைசியாக கண்ணனைத் தூது அனுப்ப எண்ணினார்கள். ''மாதவ! வீணாக போர்புரிந்தால் இரு திறத்தார்க்கும் சேதம் உண்டு. சமாதானமாக தூது போக்கியும் இது வரையும் ஒன்றும் திட்டமாகத் தெரியவில்லை. ஏதோ வெளியில் வதந்தி உலவுகின்றது. அதில் நம்பிக்கை வைப்பது நல்லதன்று. அதனால் தாங்கள் தயை கூர்ந்து செல்ல வேண்டும். நாட்டில் பகுதி கேள். பாதி கொடுக்க மறுத்

தால் ஐந்து நகரம் கேள். அதற்கும் இணங்காவிட்டால் ஐந்து ஊர் கேள். அதற்கும் சம்மதம் இல்லையானால் ஐந்து வீடாவது கேள்'' என்றார்கள்.

கண்ணன் தூதாகச் சென்றான். திருதராட்டிரனிடம் வந்த காரியத்தைக் கூற, அரசன் உடனே ஒரு பேரவை கூட்டினான். அதில் கிருஷ்ணன் பாண்டவர்களின் பெருந்தன்மையையும் கௌரவர்களின் கெட்ட செயல்களையும் கூறவே, துரியோதனன் அவ்விடத்தை விட்டு அகல எண்ணினான். உடனே கண்ணன் தான் வந்த காரியம் கை கூடாது என்று எண்ணி அவையை விட்டு நீங்க, கர்ணனும் மற்றவர்களும் அவனைப் பின் தொடர்ந்தார்கள். விதுரன் மாளிகையில் சென்று வாசுதேவன் இருந்தான். அப்போது கர்ணன் அங்கு வந்தான். கர்ணனை எங்ஙனமேனும் பாண்டவர்கள் வசமாக்க எண்ணினான்.

கண்ணன் :—கர்ணனை அழைத்து "கர்ணனே! உன்னிடத்தில் ஒரு இரகசிய காரியம் சொல்ல வேண்டியிருக்கிறது. நீ நினைத்திருப்பதுபோல இராதாவினுடைய மகனல்லை. குந்தி தேவிக்குச் சூரியனால் பிறந்த குமாரன். இந்த முறைப்படி நீ பாண்டவர்களின் மூத்த தமையனாகும். அதனால் நீ திரும்ப அவர்களோடு சேர்வது நன்று.''

கர்ணன் :—"தேவ! தாங்கள் கூறுவது மெய்யே. என் தாயார் என்னை ஆற்றில் பேழையில் வைத்துவிட, அப்போது சூதனும் மனைவியும் என்னை எடுத்து வைத்து என்னை இப்பதவி அடையும்படி செய்தார்கள். எனக்கு வேண்டும் சடங்குகளை அவர்களே செய்தார்கள். அங்ஙனமிருக்க யான் அவர்கட்குரிய கடமை

களைச் செய்வது தருமமாகும். அஃதன்றி அவர்களை விட்டு நீங்குவது அறநெறியன்று.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய் வில்லை செய் நன்றிகொன்ற மகற்கு' என்பதை யான் மறக்கலாமா? யான் ஒரு நாளும் அவர்களை விட்டு விலக மாட்டேன்."

**கண்ணன்:**—"கர்ணா! நீ சிறுபிள்ளைத்தனமாய்ப் பேசுகிறாய். பாண்டவர்களை அடைவதால் வரக்கூடிய நன்மைகளை நீ கவனித்தாயில்லை. நீ இன்பம் எய்தி சுகமாக வாழ லாம். இவ்வுலகம் முழுவதும் உன் கைக்கீழாகும். நீ அரசனாக அரியணையில் அமர்ந்திருக்கும் பொழுது, தருமன் கவரி வீசவும், பீமன் வெண்குடை கவிக்க வும், அர்ச்சுனன் சாரதியாய் தேர் செலுத்தவும் செய்வார்கள். இத்தகைய பிறப்பை எய்தி சீர் பெற வாழலாம்."

**கர்ணன்:**—"ஐயா! யான் பேராசை பிடித்தவன் என்று நினைக்கிறீர்கள். தாங்கள் சொல்வதைவிட மேலான காரியம் துரியோதனன் செய்திருக்கிறான். என் னுடைய உண்மையான பிறப்பை அறியாதிருந்தும், ஒரு தாழ்ந்த குடும்பத்தில் பிறந்தேன் என்பதை அறிந்திருந்தும், என்னை அங்கநாட்டுக்கு அரச னாக்கி, பெருமைப்படுத்தினான். அன்னார் தன் மக் களையும் தம்பியையும் பார்க்கிலும் என்னை மிகவும் மதித்துப் பாராட்டுகிறார். அவருடைய மக்களில் பார்த்தனுக்குக் தனி எதிரியாக என்னை நினைக்கின் றான். இவ்வாறு என்னை நம்பி இருக்கும்போது அவனைக் கைவிட்டுப் போவது பெரும் பாதகமா கும்.

'சிதை வகல் காதல் தாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவி அந்தணரை ஆவைப்பாலரைப் பாவை மாரை
வதை புரிகுநர்க்கு முண்டா மாற்றலா மாற்றன் மாயா
உதவி கொன்றார்க்கு என்றேனும் ஒழிக்கலாம் உபாய
[முண்டோ.'

'ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கு
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கில் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றார்க்கு உய்தி யில்லென
அறம் பாடிற்றே.'

இத்தகைய அறமொழிகள் இருக்க இதைக் கவனி யாது துரியோதனனை விட்டு நீங்குவேனாகில் யான் மீளா நரகத்தை அடைவேன்.''

கண்ணன் :—''கர்ணா ! இன்னொன்று சொல்கிறேன் கேள். மிகவும் அழகுவாய்ந்த பெண்மணியாகிய திரௌபதி உன்னுடைய மனைவியாகும். அவளது இன்பத்தை நீ பெறுவாய். இகபோகத்தை எய்தி நீ சுகமாக வாழலாம்.''

கர்ணன் :—''இந்தச் சிற்றின்பம் எனக்கு வேண்டியதில்லை. என்றும் அழியா பேரின்பத்தை அடையவே யான் எண்ணுகின்றேன். அருச்சுனனைத் தோற்கடித்து அதனால் கிடைக்கிற இனிமை எனக்கு வேண்டும். எனக்கு வேறே ஒன்றும் பிரியமில்லை.''

கர்ணன் :—''கர்ணா ! விஜயனை வெல்லலாம் என்று நினைப்பது வீண். அவன் காண்டீபம்என்ற வில்லைஎடுத்துப் போர்புரியும் போது, நீ உண்மையை அறிவாய். யான் தேர்ச்சாரதியாக அமைந்து தேர் செலுத்தும்போதும்

நீ வெற்றி கொள்வதைப் பார்ப்பேன். அப்போது தான் யான் சொல்லிய வார்த்தைகளை மனதில் எண்ணி வருந்துவாய்.''

மாதவன் கர்ணன் கூறிய மொழிகளைக்கேட்டு மனதில் மகிழ்ச்சி எய்தி அவன் நின்றும் அகன்றான். தாமோதரன் பாண்டவர்களை அடைந்து விஷயத்தைத் தெரிவித்தான்.

## VII

குந்திதேவி கோவிந்தன் தூது சென்று திரும்பி வந்ததை அறிந்தாள். "கர்ணன் சிறிதேனும் மாதவன் உரைத்ததை மனதிற் கொள்ளவில்லையே. இவனாலல்லவா போர் நிகழப்போகிறது. அதனால் கர்ணனை அடைந்து அவனிடத்தில் யான் உன் தாயார். நீ பாண்டவர்களின் மூத்தவன் என்று சொன்னால் ஒரு வேளை அவன் மனம் இளகாதா'' என்று நினைத்தாள் குந்தி. குந்திதேவி கர்ணன் வரும் வழியை நோக்கிக் காத்து நின்றாள். கர்ணன் கண்டு அவளுக்கு வேண்டியது யாது? என்று கேட்டான்.

குந்திதேவி கர்ணனைப் பார்த்து, "கர்ணா! நீ தாழ்ந்த குலத்தில் பிறந்தாய் என்று கூறுவது உண்மை யன்று. யான் குந்திபோஜ அரசன் அரண்மனையில் இருக்கும்போது துருவாச முனி ஒரு மந்திரம் உபதேசித்தார். யான் அப் போது கன்னிப் பருவத்தேன். அம்மந்திரத்தின் வல்லமையைக் கண்டறிய வெங்கதிர்க் கடவுளை மனதில் நினைத்ததும், அக்கடவுள் வந்தடைய, அக்கடவுள் அருளால் நீ பிறந்தாய். ஆதலால் நீ பாண்டுவினுடைய மகனாகும். அந்த முறையினால் இந்நாட்டின் பட்டம் உனக்கே உரியது. நீ பாண்டவர்களுக்கும் துரியோதனாதியர்கட்கும்

அரசனாகியிருந்து குடும்பச் சண்டையைத் தடுக்கலாம்" என்றாள்.

கர்ணன், இதைக்கேட்டு, "தாயே! நீ கூறியது யாவும் உண்மையே. சத்திரியர்கட்குரிய சடங்குகளை நீ ஒன்றும் செய்யவில்லை. நீ என்னை உன் மகன் என்று அழைப்பது கூட தகாது. என் பிறப்பைப்பற்றி வெளியிடுவதே தகாது. அருச்சுனனுக்கு அஞ்சி யான் இவ்வாறு செய்கிறேன் என்று பிறர் கூறுவர். என்னை இப்பதவிக்குக் கொண்டு வந்தது துரியோதன இளவரசே. அன்னார் செய்த நன்றியை மறந்து உன்னை அடைந்தால் உலகினர் என்னை இகழாரோ? தாயே! யான் பாண்டவர்களை அடைவேன் என்று சிறிதேனும் நினைக்கவேண்டாம். யான் இவ்வுலகை நீத்து விண்ணுலகை அடைவது வரைக்கும், துரியோதனனைவிட்டு அகலேன். அருச்சுனனைக் கொல்லவே துணிந்துள்ளேன். அல்லது அவனால் கொல்லப்படுவேன். இந்த இரண்டில் ஒன்று நடந்தாலல்லது யான் சும்மாவிரேன். என்னைப் பற்றிக் கவலை கொள்ள வேண்டியதில்லை" என்று கூறினான்.

குந்தி மிகவும் வருத்தத்துடன் தான் நினைத்துவந்த காரியம் முடியவில்லையே என்று எண்ணி கர்ணனிடத்தில் ஒன்று மாத்திரம் வேண்டிக்கொண்டாள். அருச்சுனன்மேல் சர்ப்பக்கணையை ஒருகாலன்றி இருகால் ஏவாது ஒழிதலும், மற்றைய பாண்டவர்களைக் கொல்லாது ஒழிதலுமாகிய இரு வரம் தருக என்றாள். அங்ஙனமே கர்ணன் ஆகட்டும் என்ன, குந்திதேவி அவனை விட்டு அகன்றாள்.

கிருஷ்ணன் அத்தினாபுரத்தினின்றும் திரும்பி விராட நகரத்திற்கு வந்தான். தான் போய் வந்த காரியம் பாழானது என்பதைத் தெரிவித்தான். ஒரு ஊசி நுழைய

இடம் தரமாட்டேன் என்று துரியோதனன் சொன்னதாக மாதவன் தெரிவித்தான். அதனால் பாண்டவர்கள் போருக்கு ஏற்பாடு செய்தார்கள். கௌரவர்களும் யுத்த சன்னத்த ராய்ப் புறப்பட்டார்கள். இரு சேனைகளும் குருசேத்திரம் என்ற இடத்தில் கலந்தன. கௌரவ சேனைக்குத் தளகர்த் தர் பீஷ்மர். அவருடைய தலைமையின்கீழ் 9 நாள் போர் நடந்தது. 10வது நாள் பார்த்தன் சிகண்டி என்றபேடியை முன்னிறுத்தி அமர் புரிய வந்தன். சிகண்டியைக் கண்ட வுடன் பீஷ்மர் தன் படைக்கலங்களை எறிந்து விட, விசயன் தொடுத்து சரமாரி பொழிந்தான். ஒரு அம்பு அவர்மேல் பாய்ந்து அவரை வீழ்த்தியது. அம்பு களுக்கு மேல் விழுந்தார்.

கர்ணன், வீடுமர் விழுந்ததைக் கேட்டு அழுத கண் ணோடும், சிரசின் மேற் குவித்த கரங்களோடும் சென்று, வீடுமர் பாதங்களில் விழுந்து தொழுது "குருகுலாதிப! உன் கண்ணெதிர்ப் பட்ட போதெல்லாம் நின்னால் உவர்க் கப்பட்ட இராதா புத்திரனாகிய கர்ணன் வந்திருக்கின் றேன்" என்றான். பீஷ்மர் அச்சொற் கேட்டலும் அவனைத் தமது கையாற் பற்றித் தழுவி, "நின்னை ஒப்பார் உலகிலில்லை. நீயோ பெருந்தகை. துரியோதனன் செய்த வஞ் சனைகளுக்கெல்லாம் நீயும் உட்பட்டிருந்தமையால் உன்னை வன்சொற்களால் கடிந்து வந்தேனே அன்றி மற்றன்று. அவன் சோற்றை உண்பவனாகிய நீ அவன் கருத்தின் வழி ஒழுகுதல் நின் கடனன்றோ. அது நின் குற்றமன்று. நீ சுத்த வீரன். நின்னிலும் சிறந்த வள்ளல் இல்லை. நின்னிலும் சிறந்த நன்றியுள்ளான் இல்லை. அன்னனாகிய நின்னை நான் உவர்த்தல் எப்படி?" என்று புகழ்ந்தனர்.

கர்ணன் "நான் என் அறியாமை காரணமாக உம்மை இகழ்ந்து தகாத வன்சொற்கள் கூறியுள்ளேன். அவற்றைப்

பொறுத்தருளுதல் வேண்டும். போர் செய்தற்கும் அனுமதி தரவேண்டும்'' என்றான்.

வீடுமர் மகிழ்ந்து அவனை நோக்கி, ''சுவர்க்கத்தை அடைய வேண்டும் என்னும் அவாவோடு நீ போர்புரியக் கடவை. கோபத்தோடும் மார்ச்சரியத்தோடும் போர் செய்யாது தருமத்தையே கைக்கொண்டவனாய் உனது அரசனுக்குத் துணைசெய்யக் கடவை. பாண்டவர்களை ஜெயிக்க உன்னால் ஆகாது. அவர்களுக்கு வாசுதேவன் துணை புரிகின்றான்'' என்று கூறினர்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட கர்ணன் துரியோதனனை அடைந்தான். போருக்கு வேண்டிய ஆயத்தஞ் செய்தான்.

துரியோதனன் சிந்தை கலங்கி இனிச் சேனாபதியாதற் குரியார் யாரென, கர்ணன் "யானே சேனாபதியாகிப் போரினை வென்று தருவேன்'' என, துரியோதனன் கர்ணனை நோக்கி "நீ சேனாபதியானால் அரசாய் நிற்பவர் யாவர்'' என்றான். அதுகேட்டுக் கர்ணன் நம் வில்லாசாரியராகிய துரோணரே சேனைத்தலைவராக என்ன, அரசரெல்லாம் தகும், தகும் என்று ஆர்ப்பரித்தனர். அதுகேட்டுத் துரோணரும் உடன்பட அதற்குரிய சடங்கெல்லாஞ் செய்து சேனாபதியாக்கப்பட்டனர்.

துரோணர் தன் படையை பத்மவியூகமாக வகுத்தனர். இதைக் குலைக்கச் செய்வது அருச்சுனன் கர்ணன் இவர்கள் இருவருக்குத்தான் தெரியும். பார்த்தன் மகன் அபிமன்னியுவுக்கும் தெரியும். அருச்சுனன் வேறு பக்கத்தில் அமர் ஆடியதால், அபிமன்னியு அந்த வியூகத்தை அழிக்கப்புறப் பட்டான். அவன் தனியாக அகப்பட்டான். கௌரவசேனை இதைப் பார்த்து அவனை வளைந்துகொண்டது. அபிமன்னியுவும் தனியாக இருந்தும், மற்றவர்களை விரட்டி விரட்டி

அடித்தான். "புலிக்குப் பிறந்தது பூனையாகாது" என்பது நன்கு விளங்கிற்று. இந்தச் சமயத்தில் கர்ணன் வளைந்து கொண்டு அவன் வில்லை ஒடித்தான். அதனால் முடியாது அபிமன்னியு போரில் காயப்பட்டு விழுந்தான்.



கர்ணன் பின் பீமனை எதிர்த்தான். பீமன் தன் கதாயுதத்தால் கர்ணன் தேரைத் தாக்கினான். கர்ணன் அப்போது ஒளிந்துகொண்டான். பின்னும் எதிர்த்தான். பீமனுடைய கதை சிறிது தவறினது. உடனே யானைகளை எடுத்துச் சுழற்றி, கர்ணன்மேல் எறிந்தான். அவைகளை கர்ணன் தடுத்தான். இருவரும் ஒருவரை ஒருவர் வெல்ல இயலாது சிறிது நேரம் மலையும் மலையும் மலைந்தாற்போலப் போராடினர். அப்போரில் பீமன் கர்ணனுக்குத் தோற்றானாயினும் கர்ணன் குந்தி தேவிக்கு அளித்த சத்தியத்தை நினைந்து அவனைக் கொல்லாதொழிந்தான்.

மற்றொரு சமயம் கர்ணன் சகாதேவன்கூடப் போர் செய்தான். அவனது வில்லை முறித்து அவனையும் முறியடித்தான். கர்ணன் அவனையும் கொல்லாது, குந்திதேவிக்களித்த சத்தியத்தை நிலை நிறுத்தினான்.

மற்றொரு சமயம் கர்ணனுக்கு பீமன் மகனாகிய கடோற்கசனோடு போர் புரியவேண்டி வந்தது. கடோற்கசனுக்கும் கர்ணனனுக்கும் மூண்ட வக்கிரயுத்தத்திலே முன்னவன் ஆண்மைக்கும் மாயங்களுக்கும் எதிர் நிற்க இயலாது, கர்ணன், இனிப் பிழைத்தற்கு வேறுவழியில்லை என்று எண்ணி இந்திரன் கொடுத்த சக்தியைப் பிரயோகித்தான். அச்சக்தியால் கடோற்கசன் மாண்டான். அச் சக்தி அவனைக் கொன்றுவிட்டுத் திரும்ப இந்திரனிடத்திற் சென்றது. இது கர்ணனுக்கு ஒரு பெரும் நஷ்டமாய்த் தீர்ந்தது. அர்ச்சுனனைக் கொல்வதற்காக வைத்திருந்த இந்தச் சக்தியும் போய்விட்டது.

பாண்டவர்கள் கடோற்கசன் மாண்டமை யுணர்ந்து புலம்பியழ, கண்ணன் அவன் ஆண்மையைப் புகழ்ந்து மகிழ்ந்து பார்த்தனை மார்புறத் தழுவினான். இதன் உண்மையாது என்று வினவ, கண்ணன் "கர்ணனுக்கிருந்த மகத்தாகிய பலம் ஒன்றே. அதுவும் இன்றே அழிந்தது. அவன் வச்சிர பாணத்தை உன்மேல் விடுவானாயின் யாது செய்வது என்று எண்ணியிருந்தேன். அஃது ஒருவனையே தப்பாமற் கொல்வதாதலின், அது முடிந்தமையால் கர்ணன் பலம் இன்றோடே போயிற்று" என்றான்.

## VIII

துரோணர் தலைமையில் போர் முடிவுறாமல் நடந்து கொண்டேயிருந்தது. அப்போது கண்ணன் அருச்சுனனை நோக்கி "துரோணாசாரியரை வெல்ல விரும்பினால் அசவத்தாமா இறந்தான் என அவர்க்குச் சொல்லுதல் வேண்டும்" என்றான். அருச்சுனன் "அதுசெய்து அரசுகொள்வதிலும் அரசிழப்பது நன்று" என்றான். அதுகேட்ட வீமன், அசுவத்தாமா என்னும் ஒரு யானையைக் கொன்றுவிட்டு "அந்தோ! அசுவத்தாமா என்னும் மதயானையும் இறந்தது" என்று இருபொருள்பட முழங்கிக் கூறினான். அதனைக் கேட்ட துரோணர் நெஞ்சழிந்து உடல் தளர்ந்து கையிற்பிடித்த வில்லை வீசிவிட்டுக் கல்லுருப் போன்று அசைவற்று நின்றார். அவருடைய உயிரும் நீங்கியது.

துரியோதனன் துரோணர் இறந்தமைக்குப் பெரிதும் வருந்தி "இனி என் சேனைக்கு அதிபதியாவார் யார்" என்று தன் துணைவர்பால் வினவ, யாவரும் "கர்ணனே தக்கான்" என்றார்கள். அவ்வுரையைத் துரியோதனன் சிறிது நேரம் மனத்தில் எண்ணினான். "கர்ணன் பலமுறை தோற்றவன். ஆயினும் பீஷ்மர், துரோணர் இவர்கட்கு

அடங்கியிருந்து நடந்தமையின் தன் மனம்போலல்லாது செய்த போரில் அவன் ஆண்மையை நிதானித்தல் கூடாது. ஆண்மைதான் குறையினும் அவனிடத்துள்ள சர்ப்பக் கணேயோ எவனேயும் விஞ்சவெட்டா வலியுடையது. அதனுலாயினும் அர்ச்சுனனேக் கொல்லாது விடான்'' என்று எண்ணி துரியோதனன் தன் சேனேக்குக் கர்ணனேயே அதிபதியாக்கினுன்.

அவ்வாறே கௌரவ சேனே முன்னர் எந்நாளினு மில்லாத புத்தாண்மையும் போரார்ப்பரிப்பும், மிக்க முழக்கமும் உடையதாய்க் களம் புகுந்தது. கர்ணன் நகுலனே எதிர்த்துக் கொடிய யுத்தஞ் செய்து அவன் சாரதியையும் தேரையும் குதிரைகளேயும் ஆயுதங்களேயும் அழித்து நிராயுதனுக்கினுன். குந்திக் குரைத்த வாக்கைக் காக்குமாறு அவனுயிரை வாங்காது வில் நாணே அவன் கழுத்திற் சுற்றி நாணித் தலே குனிந்து முதுகிட்டோடச் செய்தான். நகுலனேப் புறங்கண்ட கர்ணன் பெருமித முற்றவனுய் அர்ச்சுனனேத் தேடிச் சென்முன். அருச்சுனன் அவன் கருத்தை உணர்ந்து எதிர்த்து அவன் சேனேகளே யெல்லாம் சூரியாத்தமனம் வரையும் தன் வில்லுக் கிரையாக்கி விஜய பேரி முழக்கினுன்.

சூரியன் தன் மைந்தன் சோர்ந்தான் என்று அவனுக்கு இரங்கி அவனேப் போர் ஒழிவிக்கக் கருதினுன்போல் மேற்றிசைக் கடலில் மூழ்கினுன். அவ்வளவில் இரு திறச் சேனேயும் போர்தணிந்து பாசறை புகுந்தன. துரியோதனன் அன்று இரவு வீரரை அழைத்து, ''நமது முயற்சி வீணுகின்றது. விசயன் என்ற பெயர் மாருமல் நிற்கிறது. இன்றும் விஜயனுக்கே வெற்றிகிடைத்தது. உங்களே யெல்லாம் நம்பி வீணே இப்போரைத் தொடங்கினேன்'' என்முன்.

அப்பொழுது கர்ணன், துரியோதனனை நோக்கி "நான் உயிரோடிருக்குங் காறும் பாண்டவரை வெல்ல ஒட்டேன். நாளைப் போரில் அர்ச்சுனனை வெல்லுவேன். ஆனால் எனக்குச் சல்லியனைச் சாரதியாகத் தருவதானால் பார்த்தனை நாளை பொழுது அடையுமுன் வீழ்த்துவேன்" என்றான்.

அதுகேட்ட துரியோதனன் உள்ளந்தேறி அது செய்வதாகக் கூறிச் சல்லியன்பாற் சென்றான். சல்லியன் அவனை நோக்கி "நீ வந்த கருமம் யாதென," துரியோதனன் சல்லியனைத் தொழுது, "பகைவரைக் கருவறுத்துச் சேர்ந்தவர் பிழையெல்லாம் பொறுத்து உலகமுழுதும் ஆளுகின்ற பெரியோரே! 'நின் பால் ஒரு வரம் பெருமாறு வந்தடைந்தேன். அதனை மறுத்திடாமல் நீ தருதல் வேண்டும். மறுத்தால் என் வாழ்வு இன்றோடு அழியும்' என்றான். அதுகேட்ட சல்லியன் "வேண்டுவது யாது? நீயோ ராஜாதிராஜன். உனக்குற்ற குறை யாது?" என்று வினவ, துரியோதனன் "கிருஷ்ணனைப்போல் நீயும் எங்களைக் காத்திடுதல் வேண்டும். கண்ணன் பார்த்தனுக்குத் தேர்ச் சாரதியாயிருந்து அவனைக் காப்பதுபோல, நீயும் கர்ணனுக்குத் தேர்ச்சாரதியாகி என்னைக் காத்தருளவேண்டும்" என்றான்.

அதுகேட்ட சல்லியன், கொடிய விட நாகம்போலச் சீறி எழுந்து, "என்னை மதியாமல் இப்புன் சொல்லைக் கூறப் புகுந்தனை. தணித்தற்கரிய கொடும்பசிதான் வந்து வாட்டினும் புலி புல்லைத் தின்னாதன்றோ. நால்வகைத் தேர் வீரருக்குந் தேர் செலுத்தும் சாரதி மகனாகிய கர்ணனுக்கு என்போலுஞ் சத்திரியனா தேர் செலுத்துவ" தென்று அதிர்த்துரைத்தான்.

துரியோதனன், தன்காரியம் முடிப்பதற்காக பல உதாரணங்கள் உரைத்தான். "திரிபுரம் எரிக்கப் புகுந்த விரிசடைக் கடவுட்குத் திசைமுகக்கடவுள் தேர்ச் சாரதியாயினன். கேசவன் அருச்சுனனுக்குத் தேர்ப்பாகனானான். அருச்சுனனும் விராடன் மகனுக்குத் தேர் செலுத்தினான். அது இழிவென்று கூறுவது தகாது. ஆதலால் நீயே சாரதியாயிருந்து எனக்கு வாகை சூட்டவேண்டும்" என்று இரந்தான். அங்ஙனமே சம்மதித்தான் சல்லியனும்.

பதினேழாநாட் போருக்கு இருதிறச் சேனைவீரருங் களங் கொண்டனர். சல்லியனும் கர்ணனும் தேர் மிசை வருகின்ற கம்பீரத்தைத் துரியோதனன் வீரர்கள் கண்டு ஆரவாரித்தனர். இன்று பாண்டவர் சேனை அழிந்தது என்று எண்ணினார்கள். கர்ணனும் சல்லியனைச் சாரதியாகப் பெற்ற தனக்கு வெற்றி கிடைப்பது உறுதி என்று நினைத்தான். சல்லியனோ பாண்டவர்களுக்குத் துணைபுரியும் மனப்பான்மை யுடையவன். அருச்சுனன் பெருமைகளைப் பாராட்டிக் கர்ணன் பெருமிதத்தை ஆழ்வித்தான்.

அப்பால் அமர் ஆரம்ப அடையாளமாகச் சங்கங்களும் தாரைகளும் பேரிகைகளும் முழங்கி ஆர்த்தன. கர்ணன் உதிஷ்டிரனைத் தேடி எதிர்த்துப் போர் செய்தான். அதில் உதிஷ்டிரன் தேர்ச் சாரதியையும் தேரையும் இழந்து முதுகிட்டு ஓடினான். குந்திக்கு அளித்த வாக்கால் தருமரையும் கொல்லாது போகும்படிச் செய்தான். அதுகண்டு வீமன் உருத்தெழுந்து இடிபோல் ஆர்த்து அறைகூவிக் கர்ணனை எதிர்த்து, கொடிய யுத்தஞ் செய்து அவனை மூர்ச்சையுற்று வீழ்வித்துச் சல்லியனையும் தேரைக் கொண்டு களத்தைவிட்டு ஓடச் செய்தான். உடனே வீமன், கையில் கத்தி எடுத்துக்கொண்டு, கர்ணனின் நாக்

கைத் தாண்டு படுத்தச் சென்றான். அப்போது, சல்லி யன் அவனை எச்சரிக்கை செய்தான். அவ்விதம் செய்யாது மற்றப் பக்கங்களில் அமர் ஆடினன்.

கர்ணன் சிறிது பொழுதில் மூர்ச்சை தெளிந்து மீண்டும் களம் புகுந்தான். அப்போது உதிஷ்டிரன், நகுலன், சகாதேவன் மூவரும் சென்று எதிர்த்தார்கள். ஒரு கணத்தில் அம்மூவரையும் புறங் கொடுத்து ஓடச் செய்தான். பாண்டவர்களில் அநேகரை விண்ணுலகு அடைவித்தான். வீமன் துரியோதனனை மடக்கி அவனை மூச்சு எடுக்க ஒட்டாமல் தடுத்துக் கொடும் போர் செய்தான். அதுகண்டு கர்ணன் துரியோதனனுக்குத் துணைபுரியச் சென்றான். அருச்சுனனும் அசுவத்தாமாவை எதிர்த்து அவனைக் புறங்கண்டு விட்டு உதிஷ்டிரன் நிலையை உணருமாறு விரைந்து சென்றான். தருமன் கர்ணனால் அடைந்த தோல்வியை எண்ணி மிகுந்த வருத்த மெய்தி, அருச்சுனனை இகழ்ந்து பேசினான். பார்த்தன் பரிபவப்பட்டு தன் தமையனைக் கொல்ல வாள் எடுத்தான். உடனே கண்ணன் அவனைச் சமாதானப்படுத்தித் தமையனைக் கொல்ல எடுத்த வாளால் கர்ணனைக் கொல்லச் சபதம் செய்யுமாறு செய்து, கண்ணன் தேர் செலுத்த அருச்சுனன் களம் புகுந்தான்.

அருச்சுனன் கர்ணனை எதிர்த்தான். தேவர்கள் அந்தரத்திலே "அருச்சுனனே வெல்லுவான்" என்றார்கள். அசுரர்கள் "கர்ணன் வெல்வான்" என்றார்கள். கர்ணன் கண்ணெதிரில் அவன் மகனை அருச்சுனன் ஒரு பாணத்தாற் கொன்றான். அது கர்ணன் கோபாக்கினிக்கு நறிய நெய்யேயாக அவன் தன் வில்லில் கொடிய சரங்களைத் தொடுத்து விட்டான். இக்கொடிய போரில் இருவரும் ஒருவரை ஒருவர் வெல்லமாட்டாதவராயினர். அருச்சுனன் பிரமாத்

திரத்தை விட்டான். கர்ணன் தன் நாகாஸ்திரத்தை எவினான். அஃது அருச்சுனனைக் கொல்லுமாறு பன்னாளாகக் கர்ணன் கையிலிருந்து வளர்ந்த கொடிய நாகக்கணையாதலின் அருச்சுனன் தலையையே நோக்கி வந்தது. இப்போர் தொடங்கு முன்னரே குந்தியைக் கர்ணன்பால் போக்கி, நாகாஸ்திரத்தை இருமுறை விடாதிருக்கவேண்டும் என்னும் வரம் பெற்றது அக்கணைக்கு எதிர் நிற்க முடியாது என்பது கருதியேயாம்.

அஸ்திரம் வருவது கண்ட கண்ணன் தேரை ஒரு முழந்தாழும்படி அழுத்தினான். தேரும் தாழ்ந்தது; குதிரைகளும் பூமியில் கால்பரப்பிப் படுத்துக் கொண்டன. அவ்வம்பு அவன் கிரீடத்தைக் கொண்டு சென்றது. இவ்வுபாயத்தால் கிருஷ்ணன் அருச்சுனனைக் காப்பாற்றினான். குறிதப்பிய தென்று அக்கணை கர்ணனை இன்னும் ஒருதரம் விடுமாறு வேண்டியது. அப்பெரியான் குந்திக்குக் கொடுத்த கொள்கைப்படி மறுகால் தொடுக்க மனமில்லாதவனானான். அந்நாகம் அதுகேட்டுத் தானே அருச்சனனைக் கொல்லுமாறு செல்ல, அதனை அவன் இருகூறு செய்தான்.

அப்பால் அருச்சுனன் மிக்க திறமையுடையவனாய், சரங்களை மேகம்போலப் பொழிந்தான். கர்ணனும் ஆண்மை குன்றாது போர்புரிந்து பாண்டவசேனையில் உள்ள பலவீரர்களையும்நால்வகைச் சேனைகளையும் கொன்று பூமியை இரத்த சமுத்திரம் மூடியது என்னும்படிச் செய்தான். அருச்சுனன் அம்புகளை அடிக்கடி எய்து கர்ணனை மூச்சு எடுக்க ஒட்டாது செய்ய, கர்ணன் மெய்சோர்ந்து தன கையிலிருந்த ஆயுதங்களை நழுவவிட்டான். அதுகண்டு பார்த்தன் நிராயுதன்மேல் பாணந் தொடுக்கலாகாது என்று எண்ணித் தானும் பாணந் தொடாது சிறிதுநேரம் இருந்தான். கர்ணன் பின்னும் பேரூக்கத்தோடு எழுந்து சரங்

தொடுக்கலானான். அப்பொழுது ஓர் அசரீரி "கர்ண! உன் இரதத்தைப் பூமி உட்கொள்ளுகிறது" என்றது. முன் ஒரு நாள் கர்ணன் தன் தேர்க்காலின்கீழ் தற்செயலாய் அகப்பட்ட ஓர் ஆன் கன்றை அரைத்துச் சென்றபோது அக் கன்றுக்குரிய அந்தணன் சினந்து உன் மரணகாலஞ் சமீபிக்கும்போது உன் தேர்க்காலை பூமி கவர்தாக என்று சபித்துச் சென்றான். அச்சாபப்படி கர்ணன் தேர்க்கால் ஒன்று பூமியிற் புதைந்தது.

கர்ணன், சற்றுந் தளராது முன்போலவே பாணங்களை விட்டான். அருச்சுனன் அவைகளைக் கண்டித்துக் கர்ணன் மறுகணை தொடுக்குமுன் அம்புகளைத் தொடுத்தான். அப்போது கர்ணன், "வில்லாண்மைக்கும் பெருந்தகைமைக்கும் உறைவிடமாயுள்ளவனே! இத் தேர்க்காலைத் தூக்கிச் சரி செய்கிறது வரையும் பொறுத்திடுக" என்று கூறினான்.

கிருஷ்ணன், கர்ணனை நோக்கி "கர்ண! பார்த்தன் பெருந்தகைமையினை இப்பொழுதுதான் கண்டாய் போலிருக்கிறது. பாண்டவர்க்கு நஞ்சு ஊட்டப் புகுந்தபோதும், அரக்கு மாளிகைக்கு நெருப்பிட்டபோதும் திரௌபதியை மானபங்கஞ் செய்தபோதும் அருச்சனனின் வில்லாண்மையை அறிந்தாயில்லையோ. இப்போது நீ பாராட்டுகின்ற தருமநெறியை அந்நாள் நினைத்தனையாயின், நின்பாராட்டு வீணாகாது. இதுபயனன்று" என்றான்.

அதுகேட்டுக் கர்ணன் மறுமாற்றமின்றிச் சக்கரத்தைப் புதைந்தபடியே இருக்க பாணங்களை விடுத்தான். அப் பாணங்களால் அருச்சுனன் கையும் மெய்யுஞ் சோர்ந்து அவசமானான். உடனே கர்ணன் தேர்க்காலை எடுக்க முயன்றான். பார்த்தன் மிகவும் கோபத்தோடு ஒரு பாணம் விட்டு அவன் கொடியைச் சிதைத்தான். மற்றொரு கணையை

எடுத்து எய்ய, அது கர்ணன் உரத்தைப் பிளக்க அவனும் விழ்ந்தான். வீழ்ந்த பின்னரும் அவன் உடலினின்றும இரத்த தாரைகள் சூரியன் கிரணக் கற்றைகள்போல் கால வும், மாலைகளும் மகுடமும் ஒரு புறங்கிடப்பவும், அவன் கையோ விற்குனிப்பும் கணைகள் தொடுக்கும் கனைக்கும் மறந்ததில்லை என்றால் அவன் வீரத்திறத்தை எடுத்துரைக் கவும் வேண்டுமோ?

இந்நிலையிற் கர்ணன் கிடப்ப, சூரியனும் தன் மகன் கிடக்கையைக் காணச் சகியாது மேற்கடலில் குளித்தான். அப்போது கண்ணன் ஒரு முனிவேடந்தாங்கி கர்ணனை அழைத்து "பிரபோ! வந்தடுப்பவர்க்கெல்லாம் பெருநிதி வழங்குகின்றாய் எனக்கேட்டு நெடுந்தூரத்திலிருந்து வந் தேன். என் வறுமை நோயைக் களைந்திடுவாயாக" என் றான். "இந்நிலையில் உம்போற் பெரியோரைத் தரிசிப்ப தற்கு யான் செய்த தவமே தவமாம்.

'ஆவியோ நிலையிற் கலங்கியது யாக்கை யகத்ததோ புறத்ததோ [அறியேன்
பாவியேன் வேண்டும் பொருள் எலா நயக்கும் பக்குவந் தன் [னில் வந்திலையால்
ஒவிலாது யான் செய் புண்ணியம் அனைத்தும் உதவினேன் [கொள்க நீ யுனக்குப்
பூவில்வாழ் அயனும் நிகரலன் என்றாற் புண்ணியம் இதனி [னும் பெரிதோ.'

என்று கூறித் தன் மார்பிலே அம்பு தைத்த வாயினின் றும் காலுகின்ற செந்நீரோடு தன் புண்ணியத்தைக் கொடுக்க முனிவனும் வாங்கினன்.

வேட முனிபுங்கவன் கர்ணனை நோக்கி " உம்போலும் ஈகையாளனை யாம் கண்டிலேம். உனக்கு யாது வரம் வேண்டும் " என்று வினவ, கர்ணன் " முனிபுங்கவ! எனக்கு இன்னமும் பிறப்பு உளதேல் எழுபிறப்பினும் இரப்பவர்க்கு இல்லையென்று உரையா மனமும் வண்மையும் தந்தருள வேண்டும். இல னென்னும் எவ்வம் உரையாமை ஈயும்படி அருள்புரிய வேண்டும்" என்றான்.

இதைக் கேட்ட முனிவன் தீயிடைப்பட்ட வெண்ணெய்போல் மனம் உருகி, அவனை மார்புறத் தழுவி "வள்ளல்களுள் தலைவனே! எப்பிறப்பினும் ஈகையும் செல்வமும் பொருந்தி விளங்கி முடிவில் முத்தியும் பெறுக " என்று வாழ்த்தித் தன் பழைய வடிவமும் காட்டிப் போயினன். உடனே கர்ணன் உயிர் உடலை விட்டு நீங்கிச் சோதி மயமாய் எழுந்து சூரியனைக் கலந்தது. சூரியனும் இரத்தத்தால் மேனி சிவந்ததுபோல் செந்நிறமாய் மேல் கடல் வாய்ப்பட்டான்.

குந்திதேவி இஃது அறிந்து கூந்தலை விரித்துக் கொண்டு போர்க்களம் சென்று தன் மகன்மேல் விழுந்து அழுதாள். " என் கண்மணியே! யான் கன்னி மாடத்திருக்குநாளில் சூரியன் அருளால் உன்னைப் பெற்றுக் குடிப்பழிக்கஞ்சிப்பேழையில் இட்டு கங்கையில் இட்டேன். பின்னர் நீ துரியோதனனுக்கு உயிர்த்துணைவனானமை கேட்டும் உன் வீரங் கேட்டும் என் தவப் பயன் பலித்தது என்று எண்ணி மகிழ்ந்திருந்தேன். இப்போது இவ்வுல காண்டது போதும், இனி விண்ணுலகமும் ஆள்வேன் என்றெண்ணியோ உன் தம்பியரையும் துணைவரையும் பிரிந்து விண்ணேறினாய் " என்று அவனைத் தன் மடிமீதும் கரங்களின் மீதும் வைத்து அழுது கண்ணீரால் மஞ்சன மாட்டினாள். வேந்தர் எல்லாரும் அதிசயித்து நின்றார்கள். அப்பொழுது

துரியோதனன் இடியேறு கேட்ட நாகம்போல் உள்ளங் குன்றி உடல் குன்றிக் கண்ணீர் தாரை தாரையாக வழிய, கர்ணன் மீது வீழ்ந்து,

‘அணையார்தம் படைக் கடலின் அருநிலைக்குக் கரை ஏறலான [சோலப்

புணையாய் எத்திறங்களினும் பதிராமல் உற்றதெலாம் புகலத் [தக்க

துணையாய் என்னுயிர்க்கு உயிராந் தோழனுமாகிய உன்னைத் [தோற்றேனுகில்

இணையாருமிலா அரசே யாரைக் கொண்டு அரசாள இருக்கின் [றேனே.’

என்று பல கூறிப் புலம்பினுன்.

அப்பால் பாண்டவர்களும் தம்மைப் பெற்ற தாய் சென்று கர்ணனை மடிமீதுவைத் தழுகின்ற செயல் கண்டு கண்ணனை நோக்கி “இதன் காரணம் என்னை” என்று வினவ, அவனும் கர்ணன் வரலாற்றை ஆதியோடு அந்தஞ் சொன்னுன்.

அதுகேட்ட பாண்டவர்கள்; கோபம் உடையராய்க் குந்தியை நோக்கி “நீர் எம்மை எல்லாம் ஈன்றது எம் தமையனுகிய கர்ணனைக் கொல்வதற்கே போலும்” என்று கடிந்துவிட்டு, பரந்தாமனை நோக்கி “நீயாயினும் எமக்கிது கூறினுயில்லை. பேயின் முலைப்பால் உண்டு அவள் உயிரையும் உடன் உண்ட பித்தனுதலின் எம்மைக் கொண்டு எம் அண்ணனைக் கொல்வித்தாய். நன்று நன்று உன் சூழ்ச்சி.

'ஆடகனைப் புதல்வனைக் கொண்டழிப்பித்தாய் இலங்கை [நகர்க்கு அரசை அன்று
வீடணனைப் பகையாக்கிக் கிளையுடனே வீழ்வித்தாய் வேலை [சூழ்ந்த
நாடறியப் புகுந்து எமக்கு நாயகமாங் கன்னனையு நரன் கையம் [பால்
ஈடழியப் பொருவித்தாய் இமையோர்கள் வல்ல விரகியார் வல்லாரே.'

என்று கூறி துயர்க்கடலில் ஆழ்ந்தார்கள்.

இவ்வகையே திருத்தமையன் இணையடிக்கீழ் வீழ்ந்து அலறி தாங்கள் ஐவரும் போய்த் தம்பாடி வீடு அடைந்தார். மறுநாட் போர்க்கு வேண்டிய ஏற்பாடு செய்தார்கள்.

இவ்வாறு அழிந்தான் அகில மனைத்தும் ஏத்தும் கொடைவள்ளலாகிய கர்ணன். கர்ணனுடைய கொள்கை பின்பற்றற்குரியது. எந்நன்றிகொன்றாலும், ஒருவன் செய்த நன்றியை மறத்தலாகாது என்பதை நன்கு வெளிப்படுத்தினான். தான் ஒரு சபதம் செய்தால் அதை எவ்வாற்றாலும் நிறைவேற்ற வேண்டும் என்ற இயல்பை இவ்வுலகம் அறியுமாறு நடந்து காட்டியவன்.

'ஒப்புரவி னால்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக் கோள் தக்கது உடைத்து.'

என்ற குறள்மொழியைக் கடைப்பிடித்து, தன் உடலில் உதிரம் ஒழுக கவசகுண்டலங்களைக் கொடுத்துப் புகழ் பெற்றான். இன்னோரன்ன நீதிகளை உலகத்தார் அறிந்து உய்யவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக இலங்கியவன்.

"முடிசார்ந்த மன்னரும் முடிவிலொரு
பிடிசாம்பர் ஆவர்"

என்பது அங்கையின் நெல்லிக்கனியாம். பொன்றுதல் ஒரு காலத்தும் தவிராது. அதனால் தன் பூதவுடம்பு அழியினும், புகழுடம்பு அழியாமல் இருக்குமாறு வேண்டிய செயற்கரிய செய்கைகளைச் செய்து வாழ்வதே சிறந்த முறையாகும். அதுவே ஒருவனை நற்கதிக்கு உய்ப்பது.

நாடா திருநெல்வேலி ட
ஆழ்க்காய. உடையார்.
நாக்கநங்குழி.
ஸ்ரீபரமங்கலம் 100
ஸ்ரீபரமங்கலம் வயா.
பெரியசாமி.

சண்முகவேலால்.
விரையாநா கடைக்கிபக்க
உள்ளது

# அர்ச்சுனன்

---

ஒரு காலத்தில் மிக்க பிரசித்திபெற்ற ஓர் ஆரிய மன்னன், வேட்டை விருப்புடையனாய், சேனை ஒன்று தன்னைச் சூழ்ந்துவர, ஒரு கடுங்கதிப் புரவிமேலேறி வனத்திற் சென்றான். அங்கே அம் மன்னன் நெடுநேரஞ் சுற்றித் திரிந்தும் வேட்டைக்குரிய தக்க மிருகம் ஒன்றையுங் கண்டிலன். அதனால் தன் குதிரையை வேகமாய்ச் செலுத்தினான். குதிரையும் வாயுவேகம் மனோவேகம் பின்னடையும்படி சென்றது. சேனா வீரர்களின் கண்களில் அகப்படாவாறு நெடுந்தூரம் ஓடினது. கட்புலன் கதுவும் கடை எல்லையாகிய அதிதூரத்தே ஓர் உருத்தோன்றிற்று. உடனே அதைக் காண்பதற்காக தன் காலிற் கட்டிய தாறு கொண்டு குதிரையைச் செலுத்த, அது மின்னென விரைந்தது. கலை மானும் பெண் மானும்போல் தோன்றிய அவ்வுருக்களைக் கண்டான்; ஆனந்தம் அடைந்தான்; தன் காரியம் கைகூடிற்று என்று எண்ணினான். வில்லும் அம்பும் எடுத்துக் கொடிய ஒரு பாணத்தை ஏவினான். உடனே இரண்டும் வீழ்ந்தன. அரசன் அதுகண்டு உள்ளங் குளிர்ந்தான்; உடல் பூரித்தான். அந்தோ! அக் குளிர்ச்சி நீரிற்குமிழி ஆயிற்று. வீழ்ந்திறக்கின்ற உருக்களினிடையில் மானுடக் குரல் எழுந்தது. அரசன் துணுக்குற்றான்.

ஒரு இருடி மான் உருக்கொண்டு தன் மனைவியோடு சல்லாபஞ் செய்துகொண்டிருந்தான். இதை அறியாது அரசன் அம்பு எய்தான். அவ்விருடி இறக்குந் தறுவாயில் ஓர் சாபம் இட்டான். அரசன் சமயம் அறியாது கணை

ஒன்று ஏவி வீழ்த்தியதால், இருடி அவ்வரசனை "சிற்றின்பம் விரும்பில், உன் சிரம் ஆயிரம் பிளவாக" என்று சபித்தான். அக்கொடுஞ் சாபத்தை ஏற்ற அரசன் மனம் உளைந்தான். "இவ்வாபத்துக்கு என் செய்வேன்" என்று கவன்றான். ஆனால் அவ்வரசனோ பெண் போகத்தை முற்றுந் துறத்தற்கும் மரணத்திற்கும் சிறிதும் அஞ்சினான் அல்லன். ஆண்மைக்குந் தனது வீரத்துக்கும் பெருமைக்கும் அடாத கொடிதாகிய குற்றத்தைச் செய்தமையால், அதனை நினைக்குந்தோறும் அவன் மனம் பதைத்தது. இன்னும் ஓர் அச்சம் அவன் மனத்திடை எழுந்தது. புத்திரன் இல்லாது இறக்க நேரும் என்பதே அவ்வச்சமாம்.

> "பெறும் அவற்றுள் யாம் அறிவதில்லை அறிவறிந்த,
> மக்கட் பேறல்ல பிற."

என்ற மறைமொழிக் கிணங்க, மக்கட்பேற்றைவிட பெறுதற்கரிய பேறு ஒன்றுமில்லை. "அவ்வித செல்வத்தை அடைவதற்கு அருமையாயிற்றே," என்று அலமந்தான் அரசன். அப்பொழுது அவனை விட்டுப் பிரிந்தோர் அவன் அடைய, செய்தி அறிந்து வருந்தினர். அரசன் கட்டளைப்படி அவர்கள் நகரத்திற் சென்று "அரசன் இல்வாழ்க்கையை விட்டு, துறவறத்தினின்று காட்டிடைக் காலங்கழிக்க எண்ணுகின்றான்" என்பதாகத் தெரிவித்தார்கள். அரசனுடைய தேவிமாரும் சுற்றமும் புறப்பட்டு ஒரு கணப்பொழுதில் அரசனைச் சார்ந்தார்கள்.

இதனைக் கண்ட நகரமாந்தர்கள் சித்தங் கலங்கிப் பெற்ற தாயினும் சிறந்த பேரன்புடையவனாகிய பெருந்தகையை எவ்வாறு பிரிந்து ஆற்றுவோமெனச் சூழ்ந்தார்கள். அரசன் இணைஅடியில் வீழ்ந்து "மகாராஜா! எம்மை எல்லாம் காக்கச் செங்கோல் கைக்கொண்ட தாங்கள்

இடை நடுவில் நாங்கள் தவிக்க விட்டுச் செல்வது தருமமோ? தங்கட்குப்பின் அரசாள ஒருவரும் இல்லையே. ஒரு சந்ததிதானும் வேண்டாமோ. இதை எல்லாம் தாங்கள் மனத்திற்கொண்டு அருள் புரியவேண்டும்'' என்று கூறிப் புலம்பினார்கள்.

அவ்வளவில் அரசன் மனம் ஒருவாறு சாந்தப்பட்டது. ஆயினும் முனிபுங்கவரின் சாபம் இருக்குங் காறும் தனக்குப் புத்திரப்பேறு கிடையாது என்பது ஒரு தலை. இதை வெளியிட்டான். இதைக்கேட்ட அவன் மனைவிமார்களில் மூத்தவள் குந்திதேவியாவாள் அவனைப் பின்வருமாறு கூறித் தேற்றினாள். "அரசே! கவலைகொள்ள வேண்டாம். யான் சிறுவயதா யிருக்கும்போது, ஒரு முனிசிரேஷ்டருக்குச் செய்த பணிவிடைகளினால் அன்னவர் தனக்கு அளித்த ஒரு மந்திர சக்தியால்தேவர்களை ஆயினும் மற்று எவரையாயினும் தியானிக்க அவர்கள் வந்து தத்தம் ஆற்றலும் பெருமையும் பொருந்திய புத்திரப் பேற்றுக்கு அனுக்கிரகித்துப் போவர்'' என்று கூறினாள். இதைக் கேட்டதும், அரசன் அதிக ஆனந்தங் கொண்டான். அவ் வுரை ஒரு புணைபோலாயிற்று.

பன ஊக்கங்கொண்டு இராச்சிய காரியங்களை ஓர் உபராசனை நியமித்து அவனால் நடாத்தவும், தான் இரு மனைவிமார்களோடு காட்டிற் சார்ந்து சுகித்திருக்கவும் எண்ணங்கொண்டான். அவ்வாறே அன்று முதலாக அரசியல் அந்தகனாகிய அவன் தமையனாலே சிறிய தந்தை துணையும் ஒருவகைத் துறவு பூண்டிருந்த தமையன் முறையினுள்ளான் ஒருவனது துணையுங் கொண்டு நடத்தப் படுதாயிற்று.

அரசனும் அடவியை அடைந்து தன் இல்லக்கிழத்திகளோடு வசித்துவந்தான். கால அடைவிலே சாபத்தின்

ஞாபகம் அவனைவிட்டு நீங்கிற்று. தனக்குச் சந்ததி வேண்டும் என்ற எண்ணத்துடன், தன் மூத்த இல்லாளை அழைத்து அறக்கடவுளையும், வாயு பகவானையும், இந்திரனையும் நினைத்து அவர்தமை ஒத்த புதல்வரைப் பெறும்படி கட்டளையிட்டான். அவ்வாறே செய்து மூன்று புதல்வர்களைப் பெற்றாள். அவள் அம்மந்திரத்தைத் தனது சக்களத்திக்கு உபதேசிக்க, அவள் அதனால் அசுவனிதேவர்களைத் தியானித்து இரு மக்களைப் பெற்றெடுத்தாள். இந்த அரசனே பாண்டு என்பான். குந்திமாதேவிக்குப் பிறந்த மக்கள் தருமர், வீமன், அருச்சுனன் எனப் பெயர் பெற்றனர். இளையாளுக்குப் பிறந்த பிள்ளைகள் நகுலன், சகாதேவன் ஆகும். இவர்கள் ஐவரும் ஒரே தாய் வயிற்றுப் பிள்ளைகள் மாதிரியாக வேற்றுமையின்றி வளர்ந்து வந்தார்கள்.

பாண்டுவின் தமையனாகிய திருதராட்டிரன் அந்தகன் ஆனதால் தனக்கும் தன் சந்ததிக்கும் பட்டங்கிடைத்தல் அசாத்தியம் என்று எண்ணியிருந்தான். அவ்வெண்ணம் நீங்கி, தனக்குப் பட்டங் கிடைக்கும் என்று உறுதியாக எண்ணினான். தன் தம்பி பாண்டுவுக்குக் கிடைத்த சாபத்தால் பிள்ளை இல்லை என்றும், அவன் மனைவி அடைந்த மந்திரம் பலியாதென்றும் நம்பினான். ஆனால் சிறிது காலஞ் சென்றதும் தன் தம்பிக்கு ஐந்து புத்திரர்கள் தோன்றிப் பொலிவுற்றார்கள் என்பதைக் கேட்டுத் திருதராட்டிரன் மனம் புழுங்கியது. அவ்வந்தகனும் காலக்கிரமத்தில் நூறு புத்திரர்கட்குத் தந்தையாயினன். பாண்டு புத்திரர்கள் உயிரோடிருக்கும் வரையும் தன் புத்திரர்க்கு அரசு உரிமை உளதாகாது என்று எண்ணி, பொறாமைமேலிட்டு, எங்ஙனமேனும் பாண்டு மக்கள், காட்டில் வசிப்பதால், சாவது

உறுதி என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டான். இஃது இங்ஙனம் நிற்க.

சில வருடங்கள் கழிந்தன. பாண்டு தனக்கு நேர்ந்த சாபத்தை மறந்தான்; மனைவிமாரோடும் மைந்தர்களோடும் விளையாடினன். அவ் வனத்தில் உள்ள அழகான காட்சிகளைக் கண்டும், இனிய குரல்களைக் கேட்டும், மந்தமாருதம் வீசுவதை உணர்ந்தும், அவனை அறியாமலே ஓர்வித காம இன்பம் மனதில் உதித்தது. அச்சமயம் இளையாள் எதிர்ப்படக் கண்டு, பெருங்களிப்புடையனாகி, அவளைப் பொள்ளெனப்பற்றி அவள் மறுக்கவுங் கேளானாகி வலிதில் தழுவினன். அந்தோ! முன்னை நாள் இட்ட சாபம் கட்டியதாதலின் அவன் மனம் இவ்வாறு சென்றது. அவன் தலை வெடித்து உயிர் துறந்தான். மனைவியர் இருவரும் வயிறலைத்துப் புலம்பினார்கள். அவ்வனத்தில் கண்ட காட்சியும் கொண்டகோலமும் ஒரு கணத்தில் மறைந்தன. அவனது இளைய மனைவி, தன்னால் அவன் சாவு ஏற்பட்டதால் அவனோடு உடன் கட்டை ஏறினாள். மூத்தவள் செல்வக் குழந்தைகளைக் காப்பாற்றுவதற்காக உயிர் தரித்தாள். சிலகாலஞ் சென்றதும் அவ்வனத்து இருடிகள் புத்திரர்களையும் தாயையுங்கொண்டு அரசியல் நடத்தும் திருதாட்டிரனிடம் ஒப்புவித்தார்கள். முனிகள், அரசனைப் பார்த்து, “அரசே! இவர்கள் ஆதரவற்றவர்கள். தந்தை இழந்தவர்கள். இவர்களைக் கைவிடாது காப்பாற்றுவது நின் கடமை” என்று தெரிவித்துவிட்டுச் சென்றார்கள்.

இதுகாறும் கூறியவாறு வேட்டைமேற் சென்று சாபம்பெற்று உயிர் துறந்த அரசன், சந்திர வம்சத்திலே பிறந்து செங்கோல் செலுத்திய பாண்டு மகாராசன். உபராசன் என்று கூறபபட்டவன் திருதராட்டிரன். இவன்

பாண்டுவுக்கு மூத்தோனாயினும் அந்தகனாதலின் அரசுரி மைக்கு அருகனல்லன் என்று நீக்கப்பட்டவன்.

## II

காட்டிலிருந்து வந்த பாண்டுபுத்திரர் ஐவரும் திருதராட்டிரன் புத்திரரோடு வைத்து வளர்க்கப்பட்டார் கள். கலை பயில வேண்டிய காலம் வர, நூற்று ஐவரையும் தக்க பண்டிதர்களைத் தெரிந்தெடுத்து அவர்கள் வசம் ஒப்புவித்தான் அரசன். துரோணாசாரியாரும் கிருபாச் சாரியாரும் அவர்கட்குக் குருவாக நியமிக்கப்பட்டார்கள். வில்வித்தையில் இவர்கட்கு இணையாக ஒருவரும் இல்லை. யானையேற்றம், குதிரையேற்றம், படைக்கலம் பயிறல் முத லிய சகல கலைகளிலும் பயிற்றப்பட்டார்கள். இவ்வாறு நடந்துவருநாளையில் திருதராட்டிரன் புத்திரர்கள் அப் பாண்டவர்கள்மீது பொறாமை கொண்டார்கள். விளை யாட்டாக அப்பாண்டவர்கட்கு நினைத்தற்கரிய வன் செயல்களையுங் காலந்தோறும் செய்துவருவாராயினர்.

இவ்வாறு யாண்டுகள் பல கழிந்தன. ஒருநாள் விடி யற்காலத்திலே மகேந்திரஜாலக்காரனுடைய வித்தைகளைக் காணும்பொருட்டு அவாக்கொண்டு விரைகின்றவர்களைப் போல நகரமாந்தர்கள் எல்லாரும் திரள் திரளாகப் புறப் பட்டார்கள். சூரியனும் தனது பொற் கிரணங்களைப் பரப்பி அற்றைய நிகழ்ச்சியைக் காண ஆசையுற்றான்போல் உதயமானான். வில்வித்தையிலே பெயர்படைத்த அரச குமாரர்களது வில்லாண்மையைக்காண வகுத்து அமைக் கப்பட்ட விளையாட்டுக் களத்தை இலட்சக்கணக்கான மக்கள் அடைந்தார்கள்.

அக்களமானது யாவரும் அதிசயமுற அலங்கரிக்கப் பட்டது. நாலாபக்கங்களில் தோரணங்கள் தொங்க விடப்பட்டன. வாழைகள் என்ன, கமுகுகள் என்ன, இவைகளால் கொட்டகை அலங்கரிக்கப்பட்டது. கீழே பல வர்ணப் பூக்களாற் கம்பளம் விரிக்கப் பட்டது. கொடிகள் அங்கங்கே நாட்டப்பட்டன. காற்றினால் அசைந்துகொண்டே இருந்தன. அவைகள் அங்கு நடக்கும் சம்பவங்களைக்காண மக்களை அழைப்பது போன்றன. அங்கங்கே வாழைக்குலைகளும், மாலைகளும் தொங்கிக் கொண்டிருந்தன. கண்டவர்கள் கண்களைக் கவரும் எழில் உடையதாய் இலங்கியது. மக்கள் இருப்பதற்கு ஆசனங்கள் அமைக்கப்பட்டிருந்தன. சிங்காதனங்கள் பந்திபந்தியாக இடப்பட்டுள்ளன. யாவரும் அவர் அவர்க்கு அமைக்கப்பட்ட இடங்களில் அமர்ந்தார்கள். பெண்களுக்கும் வேறு தனியாக இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. அவர்களும் தங்களுக்குரிய இடங்களில் இருந்தார்கள். தேவர்களும் இதனைக் காணுமாறு அந்தரத்தில் திரிந்தார்கள்.

குதிரைகள்மேல் ஏறிச் சென்றும், யானைகளின்மேல் ஏறிச்சென்றும், சிவிகையில் ஏறிச்சென்றும் அரசகுமாரர்கள் அக்களத்தை அடைந்தார்கள். அவர்கள் வந்தடைந்ததும், மாந்தர்களின் ஆரவாரமும் இரைச்சலும் அடங்கின. கோமக்களும் தங்கள் ஆசிரியர் கற்பித்தபடி வரிசையாக நடந்தார்கள். அவர்களுள் முதன்மையாகப் பிரகாசித்தவர் துரியோதனனும், வீமனும், அருச்சுனனுமே. முதன் முதல் துரியோதனனும் வீமனும், சிறிது நேரம் மற்போர் மலைந்தார்கள்.

பின்னர் வில்வித்தையிலே வல்லவனுகிய அருச்சுனன் தனது வில்திறமையைக் காட்டும் பொருட்டு அரங்கத்தை அடைந்தான். மாந்தர்கள் கண்கள் எல்லாம் அவனையே நோக்கின. அவனைப் பார்த்தோர் எல்லாம் வில்வித்தையில் இவனே விசயன் என்று கூறிக் கொண்டாடினுர்கள். அவன் அரங்கத்தேறிய மாத்திரத்தில் ஆர்ப்பரிப்பும் கரகோஷமும் விண்முகட்டையும் திருதராட்டிரன் மனத்தையும் நடுக்கின. திருதராட்டிரன் இதன் செய்தியை அறிந்து அகத்திலே பொருமை அடைய, புறத்திலே மகிழ்வான் போன்று காட்டினுன்.

அருச்சுனன் தனது வில்லை எடுத்து நாண் பூட்டிக் குணத்தொனி செய்ய, மக்கள் கண்கள் மலர்ந்தன. அவன் வில்லினின்றும் நவ நவமாகப் பாணங்கள் பறந்தன. அவன் வில் திறமையைக்கண்டு வியவாதவர் இலர். மக்களிடை கரகோஷம் இடையருது எழுந்தது. சில பாணங்கள் அக்கினிச் சிறைகளை விரித்துப் பறந்தன. சில சரங்கள் மழைத்தாரைகளைக் கான்றன. சில மலைகளைப் பிளந்து சென்றன. இவைகளை எல்லாம் கண்டு ஜனங்கள் பிரமித்து நிற்கும்பொழுது அக்களத்தின் மீதே ஓர் இருள் மேகம் வந்து மூடிற்று. எங்கும் அந்தகாரம் குடி கொண்டது. உடனே வேருெரு சரம் கதிர்க்கற்றைகளைக் கான்று கொண்டு வெளியே வந்தது. ஒரு நொடியில் இருள் இரிந்தது. இவ்வதிசயத்தைக் கண்டு களிப்படையாதார் இல்லை. இவைகள் எல்லாம் ஓர் இந்திரஜாலமயமாகவே தோன்றிற்று.

இருள் கரந்தமாத்திரத்தில் திசைகள் எங்குஞ் செவிடுபடும்படியாக வாழ்த்தொலியும் ஆர்ப்பரிப்பும் மேல் எழுந்தன. அருச்சுனனின் அரிய செயல்களைக் கண்டு பெருமகிழ்வு கொண்டு மக்கள் தம் வசம் இழந்து நின்ருர்கள்.

இவ்விதமான மதிப்பு அருச்சுனனுக்கு மேன்மேலும் உண்டாகும்படி செய்தல் தக்கது அன்று என்று நினைந்து துரோணாசாரியர் கண்ணைக் காட்டி அருச்சுனனை விளையாட்டினின்று ஒழியும்படிச் செய்தார்.

அவ்வளவில் ஆரவாரங்கள் எல்லாம் அடங்கின. அப்பொழுது அக்கூட்டத்தினின்றும் ஒருவன் எழுந்து தன்னோடு அமர் ஆடவரும்படிக் கேட்டான். அவனே கர்ணன். அருச்சுனனும் அவன் உரைத்த மொழிகளைக் கேட்டு வீராவேசங் கொண்டான். இருவரும் போர் புரியத் தயாராயிருந்தார்கள். அந்தச் சமயத்தில் கிருபாச்சாரியர் எழுந்து கர்ணன் வாயை அடக்கினர். "கர்ணன் இன்ன குலத்தான்; இன்னான் மகனென்றும் அறியப்படாதவன். அங்ஙனமிருக்க அவனை எதிர்ப்பது நல்லதன்று." என்று கூறினார் கிருபாச்சாரியர். இச்சமயத்தில் கர்ணன் அங்கதேசத்திற்கு அதிபதியாக்கப்பட்டான். இதுமுதல் கர்ணனுக்கு அருச்சுனன்மேல் பெரும் பகைமை ஏற்பட்டது. கர்ணன் துரியோதனனுக்கு உற்ற நண்பனானான். மாலைக்காலம் வந்தடுக்க, யாவரும் தத்தம் இல்லம் நோக்கிப் புறப்பட்டார்கள். போகும்போதே, "இதனால் யாது தீங்கு விளையுமோ" என்று எண்ணிக்கொண்டே சென்றார்கள்.

சிறிது நாட்கள் சென்றன. தங்கள் குருவாகிய துரோணருக்கு குருதட்சிணை கொடுக்கவேண்டும் என்று கௌரவர்களும் பாண்டவர்களும் கூடினார்கள். அப்போது துரோணர் தனக்கு, பொன், மணி முதலியன ஒன்றும் வேண்டியதில்லை என்றும், துருபதனைச் சிறையாக்கிக் கொண்டுவருவதே தனக்கு விருப்பம் என்றும் தெரிவித்தார். உடனே யுத்த சன்னத்தர்களாகி பாஞ்சால நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். துருபதனும் போர்க்களத்திற்

புகுந்தான். துருபதன் அருச்சுனன் வில்லை இருதுண்ட மாக்கினான். அச்செயல் அருச்சுனனுக்குக் கோபத்தையும், அகங்காரத்தையும் உண்டுபண்ணினது. உடனே அருச்சுனன் துருபதன் தேரின்மேலே மின்னெனப் பாய்ந்து அவனைச் சிறைப்படுத்திக் கொண்டு யுத்தக் களத்தை விட்டு அகன்றான். இவ்வாறு செய்வதற்குத் துரோணரே காரணமா யிருந்தார்.

துருபதனும், துரோணரும் ஒரு சாலை மாணாக்கர்களாக இருந்தார்கள். அப்போது இருவரும் பெரும் நட்பினர்கள். ஒருவரை விட்டு ஒருவர் பிரிவதில்லை. இவ்வாறு நிகழுங்கால், ஒருநாள் துருபதன் துரோணரைப் பார்த்து, "நண்ப! யான் அரசுரிமை ஏற்கும்போது இராச்சியத்தில் பாதிதருவேன். அதைப் பெற்று நீ சுகமாக வாழலாம்" என்றான். பின்னர் விட்டுப் பிரிந்தனர். துருபதனும் அரசனானான். அவன் கூறிய வாக்கை நினைந்து துரோணர் அவனிடம் சென்றார். அப்போது துருபதன் துரோணரைப் பார்த்தும் பாராததுபோல இருந்ததைக் கண்ட துரோணர், "அரசே! யாம் இருவரும் ஒரு சாலை மாணாக்கராக இருந்தோம். அப்போது தாங்கள் வாக்களித்ததைப் பெற வந்திருக்கிறேன்" என்றார். அதற்கு துருபதன் "உனக்கும் எனக்கும் வெகுதூரம். ஒரு அரசகுமாரன் உன்போன்ற ஒருவனை நாடுவானோ. ஒருக்காலும் இல்லை. பொய் கூறாதே. இங்கே நின்றும் போய்விடு." என்றான். இதைக் கேட்டு துரோணர் திரும்பினார். அவ்வாறு கூறிய துருபதனை அவமானப் படுத்த எண்ணங்கொண்டு தன் சீடர்களை அவன்பால் அனுப்பினர். துரோணரைக் கண்ட துருபதன் தலைகுனிந்து நாணங்கொண்டு நின்றனன். துரோணர் அவனுக்குப் புத்திமதிகளைக் கூறி

அவனை அனுப்பினர். இவ்வாறு அருச்சுனன் குருவின் அன்பை அதிகமாகப் பெற்றான்.

நற்குணமே தமக்கு ஆபரணமாகப் பூண்ட பாண்டவர்கள், பரோபகார குணங்களும் செயலும் உடையராய் யாவராலும் விரும்பப்படுகின்றவராய் ஒழுகத் தலைப்பட்டார்கள். பாண்டவர்கள் யாவருக்கும் இனியராய் பிரகாசித்தார்கள். திருதராட்டிரன் இத்தகைய கீர்த்தியைக்கேட்டு, மைபொதிவிளக்கேயன்ன மனத்தினுள் கறுப்புவைத்திருந்தும், ஜனங்கள் திருப்திக்காக தர்மரை உபராஜா வாக்கினன். அதுமுதல் உதிட்டிரன் தன் தம்பிமார்களைத் துணைக்கொண்டு நீதியாகவும் செங்கோல் வழுவாதும் அரசாட்சி செய்யத் தலைப்பட்டான்.

இங்ஙனம் சில நாள் கழிந்தன. ஒரு நாள் இரவு நகரமாந்தர்எல்லோரும்ஓர்வித கவலையின்றி ஆழ்ந்தநித்திரையில் இருக்க, இருவர் மாத்திரம் நித்திரையில்லாது சிந்தாகுலம் உடையவராய் இருந்தனர். திருதராட்டிரனும் அவன் மகன் துரியோதனனும் இருவரும் ஆழ்ந்த யோசனையில் அமர்ந்தனர். துரியோதனன் “இனி நமக்கு எக்காலத்திலும் அரசுரிமை கிடைப்பதில்லை. இன்னும் சில நாளில் உதிட்டிரனே ஜனங்களுக்கு விருப்புடைய அரசனாய் விடுவான். அங்ஙனம் அவன் அரசனாகுங் காலத்தில் அரசுரிமை முழுதும் அவன் குடும்பத்திற்கே ஆய்விடும். அதனால் பாண்டவர்களை இந்த இடத்தினின்றும் அகற்றவேண்டும்” என்று எண்ணி தன் தந்தையிடத்தில் தெரிவித்தான். அவர்கள் ஆலோசனைக்குத் துணைவர்களாக கர்ணன், துச்சாதனன், சகுனி முதலியோர் ஏற்பட்டார்கள். சகுனி தாய் வழியில் உள்ளவன். இழிதொழில் செய்யும் இயல்பு வாய்ந்தவன். மானம், ஆண்மை, நீதியில்லாதவன். இத்தகைய

ஒருவனை ஆலோசனைக்குச் சேர்த்துக் கொண்டான் துரியோதனன். திருதராட்டிரன் பாண்டவர்களை நகரத்தினின்றும் சிறிது அப்பால் தாமசிக்கச் செய்யவேண்டும் என்று துரியோதனன் கூறிய மொழிகளை ஒப்புக்கொள்ளவில்லை. 'அவ்விதம் செய்வது தகாது' என்று உரைத்தான். பலவாறு மொழிந்து தன் தந்தை சம்மதிக்கும்படிச் செய்தான். பாண்டவர்களை வாரணாவத நகரத்தில் தங்கி இருக்கும்படிச் சொல்லவேண்டும் என்று சூழ்ச்சி செய்தார்கள்.

பாண்டவர்கள் அத்தினாபுரம் நீங்கி வாரணாவதம் செல்கின்றார்கள் என்பது கேட்ட நகரமக்கள் யாவரும் மிகவும் மனமுளைந்தார்கள். அடுப்புகள் தோறும் பூசைகள் உறங்கின. அந்நகரவாசிகள் ஆயிரவர் ஆயிரவராகப் பாண்டவர்களைத் தொடர்ந்து சென்றார்கள். உங்களைப் போல் இனி எங்களைக் காப்பாற்றுபவர் யாவர் என்று கூறிப் பல்லாயிரவர்கள் பாண்டவர்கள் பாதத்தில் வீழ்ந்து வீழ்ந்து புலம்புவார் ஆயினார்கள். உதிட்டிரன் அவர்களை இனிய வசனங்களாலும் விரைவில் மீண்டு வருவோம் என்னும் வாக்குறுதியாலும் ஆற்றி, நகரத்தை நோக்கி மீண்டுபோகும்படிச் செய்து வாரணாவதத்தை நோக்கிச் சென்றான்.

அந்நகரத்து மாந்தர்கள் எல்லோரும் பாண்டவர்கள் வருகின்ற செய்தியைக் கேள்வியுற்று அகமும் முகமும் மலர்ந்து பாண்டவர்களை எதிர்கொண்டு வணங்கி உபசரித்தார்கள். அத்தினாபுரத்து மக்கள் எத்துணைக்குக் கவலையுடையவர்கள் ஆனார்களோ அத்துணைக் களிகூர்ந்தார்கள் வாரணாவதத்து மாந்தர்கள். பாண்டவர்கள் அந்நகரத்தார் செய்த வழிபாடுகளால் மகிழ்ந்து இனிது வாழ்ந்திருந்தார்கள். அத்தினாபுரத்தார் கலங்கினமையையும், வாரணாவதத்தார்

மகிழ்ச்சியையும் கேட்ட அளவில் துரியோதனன் மனம் புண்ணில் வேல் நுழைந்ததுபோலாயிற்று.

இவ்வாறு நாட்கள் கழிய, துரியோதனன் பாண்டவர்களின் முடிவுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய எண்ணினான். அவர்கள் இருக்கும் இடத்தை தீ வைத்துக் கொளுத்த நினைந்து, புரோசனன் என்னும் ஒரு கம்மியனை வருத்தி வாரணாவதத்தில் ஓர் அழகிய மண்டபம் அமைக்கக் கட்டளை யிட்டான். வெளித்தோற்றத்தினாலே கண்ணைக் கவரத்தக்கதும், அழகினாலே யாவரையும் மயக்கத் தக்கதும் சுவர்களும் அடிவாரங்களும் அவியாது சுவாலித்து எரியத்தக்க பதார்த்தங்களை அகத்தே பொதியப்பெற்றுப் பயங்கர ரூபம் உடையதாய் இருத்தல்வேண்டுமென அவனுக்குக் கற்பித்தான். அவ்வளவிலே மிகவும் அருமை பெருமை படைத்த ஓர் அழகிய மண்டபத்தைக் கண்டோர் கண்களைக் கவரும்படி அமைத்தான். பாண்டவர்களும் தாயும் அந்த மாளிகையிற் சென்று வசித்து வந்தார்கள். உதிட்டிரன் அதன் அமைப்பைப் பார்த்து, இது கெட்ட நோக்கத்தோடு செய்யப்பட்டிருக்கிறதென்பதை உணர்ந்தான்.

விதுரன் இரகசியமாக ஒரு தூதனை அனுப்பித் துரியோதனன் கொண்டிருக்கும் கொலைக் கருத்தை உணர்த்தி, ஒரு சிற்பனைக் கொண்டு ஒருவரும் அறியாது தப்பிப்போகுமாறு ஒரு சுருங்கையை அமைப்பித்தான். கோமக்கள் ஆபத்து வருவதை எதிர்பார்த்தவண்ணமாகவே யிருந்தார்கள். குறித்த நாழிகை வந்ததும், புரோசனன் அம்மாளிகைக்கு நெருப்பிட்டனன். உடனே பாண்டவர்கள் சுருங்கை வழியாக யாதொரு ஆபத்துமில்லாமல் காடு அடைந்தார்கள். பொழுது விடியுமுன் மாளிகை சாம்ப

ராயிற்று. பாண்டவர்கள் இறந்தொழிந்தார்கள் என்று எல்லாரும் கருதினர்கள். துரியோதனனும் அவன் கூட்டமும் தவிர, நகர மாந்தர் அனைவரும் துக்கக் கடலில் ஆழ்ந்தார்கள். விதுரனும் விஷயம் அறிந்திருந்தும், அறியாதான்போன்று வருத்தம் அடைந்தான். திருதராட்டிரனும் மிகவும் மனவருத்தமுடையவனய் பாண்டவர்கட்கு வேண்டிய ஈமக்கடன்களையெல்லாம் முடித்தான்.

பாண்டவர்களும், தாய், குந்திதேவியும் காட்டை அடைந்து பெருங் கஷ்டப்பட்டார்கள். தங்களை எதிர்த்துவந்த அரக்கர்களையும் மிருகங்களையும் கொன்ருர்கள். ஒருநாள் நெடுந்தூரம் சென்றதால் களைத்துத் தாகம் மேலிட, தண்ணீர்தேடி அலைந்து திரிந்தார்கள். சோர்வினல் வெறுந் தரையில் வீமன் ஒழிய யாவரும் உறக்கம் கொண்டனர். வீமன் மாத்திரம் காத்து நின்ருன்.

இவ்வாறு இருக்கும்பொழுது இடிம்பன் என்னும் ஒரு அரக்கன் நரர் வாசனை அறிந்து தனது தங்கை இடிம்பியை அனுப்பினன். இடிம்பி வீமன் இருக்கும் இடத்தை நாடி வந்ததும், அவன் அழகில் ஈடுபட்டாள். உடனே இடிம்பன் காலதாமதத்தைப் பார்த்துப் புறப்பட்டான். வீமன் அவனைக் கொன்ருன். இம் முழக்கங் கேட்டு யாவரும் விழித்துக்கொண்டனர். வீமன், சகோதரர், தாய் இவர்கள் சம்மதத்தின்மேல் இடிம்பியை மணந்து ஒரு புத்திரனைப் பெற்ருன். அவனே கடோற்கசனகும்.

பின் பாண்டவர்கள் பல இடங்களைக் கடந்து ஒரு சிற்றூரை அடைந்தார்கள். அவ்வூரைக் கலங்கும்படிச் செய்தவன் பகாசுரன் என்னும் ஓர் அரக்கன். அவனைப் பாண்டவர்கள் கொன்றொழித்து, அவனது சல்லியம் இல்

லாதபடிச் செய்தார்கள். அங்கே ஒரு பிராமணர் வீட்டிலே சிறிது காலந் தங்கினார்கள்.

## III

விளக்க மில்லாததும் மலைச் சாரலிலே உள்ளதுமாகிய அக்குக்கிராமம் சிலகாலம் அரவம் யாதுமின்றி இருந்தது. ஒருநாள் அக்கிராம வழியாக அநேக ஜனங்கள் பிரயாணிகளாய்ச் செல்கின்றவர்கள் அங்கே தங்கி, விரைந்து போசனம் அமைத்தார்கள். அது கண்டு அக்கிராம வாசிகளும் விரைந்து போசனம் முடித்துக்கொண்டு புறப்பட்டார்கள். அதைக் கண்ட பாண்டவர்களும் போதற்கு எற்பட்டார்கள். இந்தக் கிராமத்தின் பெயர் வேத்திரகீயம்.

பாஞ்சால தேசத்து அரசனான துருபதன் பல யாண்டுகள் தவஞ் செய்து, ஒரு மகனையும் ஒரு மகளையும் பெற்றெடுத்தான். மகன் பெயர் திருஷ்டத்துய்மன்; மகள் பெயர் திரௌபதி. மகளை அருச்சுனனுக்கு மணமுடிக்க வேண்டும் என்றும், மகனைக் கொண்டு துரோணனைக் கொல்லவேண்டும்என்று நினைத்தான். ஆனால் பாண்டவர்கள் எரியினால் மாண்டார்கள் என்பதைக் கேட்டு மிகவும் வருந்தினான். ஆனால் சுயம்வரம் ஏற்படுத்தி மகளை மணஞ்செய்ய வேண்டும் என்று எண்ணி, அங்கங்கே பறை யறைவித்தான். அதை ஒட்டியே மக்கள் திரள் திரளாகச் சென்றார்கள். அச்சுயம்வரத்தை நாடிச் செல்லுகின்ற பிரயாணிகளோடு அருச்சுனனும் சகோதரரும் சேர்ந்து சென்றார்கள். துருபதன் நகரத்தைப் பாண்டவர்கள் அடைந்தவுடனே ஓரிடத்தில் மாறு வேடம் தரித்து ஒருவரும் அறியாத வண்ணம் மறைந்திருந்தார்கள்.

நாற்றிசைகளிலிருந்தும் அரசிளங்குமரர் எல்லோரும் அவர் அவருக்கு ஏற்பட்ட இடத்தில் தங்கி இருந்தார்கள். சுயம்வரநாள் நெருங்குந்தோறும், ஜனங்கள் திரள் திரளாக வந்து கூடினார்கள். இரதங்கள் பந்தி பந்தியாக வீதிகளிலே செல்கின்ற ஆர்ப்பும், ஜனங்களின் ஆரவாரங்களும், ஆவண ஒலியும், வாத்திய கோஷங்களும், வீதிகளை அலங்கரிக்கும் பேரொலியும் எங்கும் நிறைந்தன. சுயம்வர நாள் வந்து அடுத்தது. தமது நண்பனாகிய சந்திர வமிசத்துக் கோமகனுடைய வில்லாண்மையும் சுயம்வரச் சிறப்பும் காண்பாம் எனக் கூறி விரைந்து எழுந்தாற்போல சூரியன் உதயஞ் செய்தான்.

துருபதன் மிக அழகிய ஓர் சுயம்வர மண்டபம் அமைத்தான். கண்டோர் கண்கள் கவரத்தக்க கவினும், யாவரும் பார்த்துப் பிரமை கொள்ளும்படியான அலங்காரமும் உடையதாக விளங்கிற்று. அக் களத்து நான் மருங்கினும் அழகிய நிழல் செய் மரங்களும், அவற்றின்மேல் படர் கொடிகளும் மணங் கமழ்ந்து நின்றன. அம்மைதானத்திலே இடை இடையே நான்மருங்கும் பளிக்குப் படிகளையுடைய சிறிய நீர்த்தடங்கள் கிடந்து விளங்கின. அரசர்களுக்கும் கோமக்களுக்கும் ஆசனங்கள் பந்திபந்தியாக அமைக்கப்பட்டிருந்தன. அமைக்கப்பட்ட ஆசனங்களில் ஒரு பக்கம் துரியோதனன், கர்ணன், சகுனி முதலியோர் இருந்தனர். மற்றொருபக்கம் பாண்டவர்கள் அந்தணர் வடிவத்தோடு அமைந்து இருந்தார்கள். அங்கே இடப்பட்டிருந்த சித்திரப் பந்தரின்கீழ் ஓமாக்கினி வளர்க்கப்பட்டது. குலகுரு அதன் பக்கத்திலே வீற்றிருந்தார். குருவுக்குச் சமீபத்தில் திரௌபதியும் மற்றொரு பக்கத்தில் பிராமணோத்தமர்கள் இருந்தார்கள்.

குறித்த முகூர்த்த காலமும் வந்து அடுத்தது. திரௌபதியின் சகோதரனாகிய திருஷ்டத்துய்மன் எழுந்து, சபையோர்களை நோக்கி, "ராஜகுமாரர்களே! எனது சகோதரியின் பாணிக்கிரகணத்தின் பொருட்டு நீங்கள் எல்லீரும் இங்கே வந்துள்ளீர்கள். இங்கே ஓமாக்கினிக்குச் சமீபத்தில் வைக்கப்பட்டிருக்கும் இவ்வில்லை எடுத்து நாண் பூட்டி மேல் இடையறாது சுழன்றுகொண்டிருக்கும் அம்மற்சயந்திரத்தை ஐந்து பாணங்களால் கீழே வீழ்த்துபவன் யாவனோ அவனே என் தங்கையை மணஞ் செய்ய யோக்கியன் ஆவான். அம்பு விடும்போது கீழே உள்ள தண்ணீரைப்பார்க்கவேண்டும். அத்தகையோனுக்கே திரௌபதி மாலை சூட்டுவாள்" என்றான். இதைக் கேட்டதும், சபைமுழுதும் மனநிலை குன்றித் திகைத்திருந்தது. வில்லாண்மையிலே பேர்படைத்த வீரரும் பலர் இஃது அசாத்தியம் என்று அடங்கினர். சிலர் அதற்கு ஒப்புக்கொண்டு, வளைக்க முயன்று பிரதிகூலப் பட்டுத் தலை குனிந்தனர். இன்னும் கர்ணன் முதலியோர் வில்லை எடுத்து உயர்த்தினார்களே ஒழிய அதனை வளைக்கும் சக்தியற்றவராயினர்.

இவ்வாறு அரசிளங் குமாரருள்ளே பெயர் படைத்தோரெல்லாம் ஆற்றாமல் பின்வாங்க, அந்தணர் கூட்டத்திலிருந்த ஒருவன் எழுந்து வில்லிருக்கும் இடத்தை அடைந்தான். யாவரும் வியந்தனர். "வில்லாண்மையில் பிறந்த வீரர்கள் எல்லாரும் திகைக்க, இவனா இதை வளைக்கப் போகின்றவன்" என்று சபையோர் சாற்றினர். வேறு சிலர் "வில்வித்தை பழகாமல் இவ்வாறு இவன் வரமாட்டான்" என்றார்கள். அவனுடைய உடல் வன்மையையும் முககாந்தியையும், பெருந்தன்மையையுங் கண்டு இவனே சாதிக்கவல்லன் என்று எண்ணினார்கள். திரௌபதியும்

"இவ்விளங் குமரனே வெல்லக்கடவன்" என்று இறைவனை இறைஞ்சினள். இவ்வாறு பலரும் பலவாருக எண்ணிநிற்ப, அவ்விளங்குமரன் வில்லை எடுத்து நின்று, சபையில் உள்ளோர்க்கு வணக்கங் கூறிவிட்டு, வில்லை வலம் வந்து, யாவரும் வியக்கும்படி எளிதாக வளைத்து ஐந்து பாணங்களைச் செலுத்தினதும், சுழன்றுகொண்டு இருந்த மற்சயந்திரம் கீழ் வீழ்ந்தது.

'' கிளர்மகுட வயவேந்தர் நாண்கள் எல்லாம்
கீழாகத் தனிநெடுநாண் கிளரவேற்றித்
தளர்வுறுசா யகந்தொடுத்தக் கற்ருேர் யாருந்
தனுநூலுக் காசிரியன் தானே யென்ன
உளர்கிகிரிச் சுழல்இலக்கை அவையோர் தங்கள்
ஊக்கம்உடன விழவெய்தான் உரவுத் தோளான்
வளரும்அருந் தவவேள்வி முனிவர் ஆர்த்தார்
வாசநறு மலர்சொரிந்து வானோர் ஆர்த்தார்.''

இவ்வில்லை வளைத்தான் அந்தணன்தானே என்று ஒவ்வொருவரும் அதிசயித்தனர். "எழிலில் தனக்கு இணையில்லாத இக்கன்னிகையை மணம்புரியுமாறு தேவர்களுள் ஒருவன் அந்தண வடிவங்கொண்டு வந்தானே" என்று ஐயுற்றார்கள். வில்லைவளைத்த இளங்குமரன் அந்தணவடிவங்கொண்டு வந்த அருச்சுனனேயாம். இவ்வாறு ஜனங்கள் குதூகலப்பட்டுக் களித்தெழுந்து கொண்டாடுஞ் சமயம் பார்த்து உதிட்டிரனும் அவன் சகோதரர் மற்றைய இருவரும் பிறர்க்குப் புலனுகா வண்ணம் அவ்விடத்தினின்றும் அகன்ருர்கள். அற்றைநாள் வெற்றிமாலை சூடிய அருச்சுனனே அங்கு திரண்டிருந்த ஜனங்களினது கண்களுக்கெல்லாம் மணியாயினன்.

திரௌபதி தனது சகோதரன் குறிப்பினை அறிந்து, சபை நடுவே நடந்துசென்று அருச்சுனன் கழுத்தில் மண

மாலை சூட்டினாள். அதுகண்ட ஏனைய அரசிளங் குமரர் எல்லாரும் நாணமும் கோபமும் உடையரானார்கள். யாவரும் ஒன்று சேர்ந்து, துருபதன்மேல் சீற்றங்கொண்டு போருக்குப் புறப்பட்டார்கள். அவனுக்கு உதவியாக அருச்சுனனும் வீமனும் நின்றார்கள். அப்போரில் அருச்சுனனும் கர்ணனும் எதிர்த்தார்கள். இருவரும் சிறிதுநேரம் பொருதபின்னர், கர்ணன் தான் தோற்றனன் என்றுகூறிப் பின்வாங்கினன். இச்சமயத்தில் ஒருவன் இடையில் வந்து "போர் ஒழிக" என்று கூறினன்; அவன் பாண்டவர்க்கு உற்றநண்பு பூண்டோனும் அவர்க்கு முக்கிய மந்திரியும் அவர்க்கு வெற்றி தருபவனுமாகிய பெருந்தகையே. அவன் தான் கிருஷ்ணன் என்பான்; இவன் பாண்டவர்கட்கு ஒருமுறையில் மைத்துனனாகும்.

அருச்சுனன் தனது இணையற்ற வெற்றியினாலே மாற்றாரைத் திகைத்துப் புறங் கொடுக்குமாறு செய்த சமயம் பார்த்து அவனோடு நட்பாளுங் கருத்தை முன்னரே மனத்துட் பொறித்தவனாய்க் கிருஷ்ணன் வெளிப்பட்டான். கண்ணனின் சமாதானப் பேச்சைக் கேட்ட அளவில், அரச குமரர் எல்லாரும் சினந்தணிந்து தத்தம் ஊர் நோக்கிப் புறப்பட்டார்கள்.

அதன் பின்னர் அருச்சுனன் திரௌபதியை அழைத்துக்கொண்டு வீமனோடும் அவ்விடத்தினின்றும் நீங்கி நகர்ப்புறத்தை அடைந்து அங்கு ஓரில்லத்தில் தங்கினான். அவ்விடத்திற் சென்று கண்ணன் பாண்டவர்களைக் கண்டான். அத்தினமே பாண்டவர்க்கும் கண்ணனுக்கும் இடையே திண்மையான கேண்மை வேரூன்றுவதாயிற்று. முக்கிய

மாக அருச்சுனனுக்கும் கண்ணனுக்கும் நட்பு வளர்பிறைச் சந்திரன்போல் வளர்ந்தது.

" ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்கவேர் வீழ்க்குமே."

என்பதற் கிணங்க அருச்சுனன் கண்ணன் இவர்கள் கேண்மைக்கு இணையாக ஒருவரையும் சொல்ல ஒண்ணாது. கண்ணன் அருச்சுனனுக்குத் தேர்ச்சாரதியாக அமைந்தான் என்றால் அவர்கள் தம்மில் ஏற்பட்ட நட்பைக் கூறவும் வேண்டுமோ ?

திரௌபதியைப் பாணிக்கிரகணஞ் செய்தவன் யாரோ என்று ஐயுற்ற பாஞ்சாலனை அவன் மகன் திருஷ்டத்துய்மன் அவன் செய்தியை அறிந்து வந்து தெருட்டினன். "ஆயுதங்களையும் வில்வித்தையையும்பற்றிப் பேசுவதால் ராஜகுடும்பத்தைச் சார்ந்தவன் என்பதற்கு ஐயமில்லை" என்றான். உடனே துருபதன் அவனையும் அவனைச் சார்ந்தவர்களையும் அழைத்து வரும்படி தன் மந்திரிமார்களை அனுப்பினான். உடனே அருச்சுனனும் அவன் சகோதரர்களும் தாயும் தகுந்த உடை அணிந்து கொண்டு சென்றார்கள். தாங்கள் இன்னார் என வெளிப்பட்டவுடன் அவ்வூர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. வீடுகள் தோறும் கொண்டாட்டம் தலைப்பட்டது. பின் வியாசர் கட்டளைப்படியும் குந்தியின் சம்மதப்படியும் திரௌபதி ஐவர்க்கும் மனைவியாக்கப்பட்டாள்.

இவ்வாறே வீடின்றி, நாடின்றி, இனமின்றி, கனமின்றி வனமொன்றி நின்ற அருச்சுனன் முதலியோருக்குப் பாஞ்சாலனால் படைவலியும் துணைவலியும், கண்ணனால் மந்திரவலியும் ஞானவலியும், பெருகுங்காலம் வந்து பொருந்தியது.

# IV

பாண்டவர்கள் எரியூட்டுக்குத் தப்பியதும், வில் வளைத்து வெற்றி பெற்றதும், விவாகத்தோடு பெருஞ் சிறப் படைந்ததும் துரியோதனன் செவிக்கு எட்டியபோது, அவன் கோபத்தாலும் துக்கத்தாலும் விழுங்கப்பட்டவ னாய்ப் பொறாமை என்னும் பெருங் காட்டிடைப்புக்கு ஒளித்தானாயினும், பாண்டவர்க்கு மிகப் பயந்து உள்ளம் புண்ணாயினான். பாண்டவர்கள் மாண்டார்கள் எனக் கொண்டு அச்சந் தீர்ந்திருந்த அவன் மனத்தில் இப்போது உண்டான அச்சம் ஆயிரம் மடங்காயிற்று. துக்கம் என் னும் பெருங் கடலிலே அச்சம் என்னும் சுறவின் வாய்ப் பட்டுக் கலங்குந் துரியோதனனை அடிக்கடி தேற்றும் தேர்ச்சித் துணைவர் ஆவோர் அவன் தம்பியாகிய துச்சா தனனும், தோழனாகிய கர்ணனும், மாதுலனாகிய சகுனி யும் ஆகும். துரியோதனன் தன் தந்தையிடத்தில் தன் மனக் கருத்தைத் தெரிவித்தான். "பாண்டவர்கள் இருப் பதால் தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் அரசுரிமையில் லாமலாகும்" என்று கூற, திருதராட்டிரனும் சம்மதித் தான். எவ்வாற்றானும் ஒரு சபை கூட்டி ஆலோசிக்க எண்ணினான்.

ஒரு பெருஞ் சபை கூட்டப்பட்டது. இதுபோன்று ஒரு சபை இதன் முன்பு கூட்டப்பட்டதில்லை. வீடுமர், விதுரன், துரோணர், கிருபர் முதலிய பெரியோர்கள் ஒரு பக்கமும், திருதராட்டிரன், அவன் மக்கள், கர்ணன், சகுனி முதலியோர் ஒரு பக்கமும் அமைந்திருந்தனர். பாண்ட வர்க்குப் பாகங் கொடுப்பதைப்பற்றி வாதம் நிகழ்ந்தது. வீடுமர், விதுரன், துரோணர், கிருபர் முதலியோர் பாண்ட

வர்க்குச் சாதகமாகப் பேசினார்கள். கர்ணன் முதலியோர் பாதகமாகப் பேசினார்கள். கடைசியாக திருதராட்டிரன் மனம் வாக்கு ஒன்றுக்கு ஒன்று முரணும்படி, நுனி நாக்கினால் இராச்சியத்தைப் பங்கிட்டுக் கொடுக்கும்படிச் சொன்னான்.

இச் சமாதானக் கருத்தை விதுரன் சென்று பாண்டவர்க்கு உரைத்தான். இது நீதியல்லவாயினும், பாண்டவர்கள், கண்ணன் துருபதன் போருக்கு அஞ்சி ஒப்புக்கொண்டார்கள். பின் துருபதன்பால் விடைகொண்டு அத்தினபுரம் சென்றார்கள். திருதராட்டிரனும் ஏனைய முதியோரும் பாண்டவர்களை வாழ்த்தி இராச்சியத்தைப் பாகம் பண்ணி ஒரு பாகத்தைக் கொடுத்தார்கள். அத்தினபுரம் திருதராட்டிரனுக்குத் தலைநகரம் ஆனதால், பாண்டவர்கள் இந்திரபிரஸ்தம் என்னும் ஒரு நகரத்தை நிருமித்தார்கள். சுருங்கக் கூறுமிடத்து அந்நகரம் பல்லாற்றானும் பெருங்கீர்த்தியும் பேரழகும் வாய்ந்ததாய் மற்றைய நகரங்களையெல்லாம் மங்குவித்து உயர்ந்து, ஒப்புயர் வில்லா அரசாலும் பிரஜைகளாலும் சிறந்து விளங்குவதாயிற்று.

இப்படி யிணையற்று இலங்குவதாகிய நகரத்திலே பாண்டவர்களும் நீதிக்கோர் உறைவிடமாக வீற்றிருந்து அரசர்கள் எல்லாம் போற்றி அடிபணியத்தக்கவாறு செங்கோல் ஓச்சுவாராயினார்கள். தௌமியர் என்ற குருவும் அவர்கள் உடன் இருந்து அவர்கட்கு வேண்டிய நீதிமார்க்கங்களை உபதேசித்து வந்தார். வியாசர் இடையிடையே சென்று வந்தார். அவர் அநுமதிப்படி திரௌபதியும் வருடத்துக்கு ஒருவர்க்காக பாண்டவர் ஐவர்க்கும் இல்லற மனைவியானாள். அவ்வருடத்துக்குரியவர் அன்றி வேறு யாரும் எட்டிப் பார்ப்பதில்லை என்ற விரதம் செய்துகொண்

டார்கள். அது தவறுமானால், அங்ககரத்தைவிட்டு சில நாள் தீர்த்தயாத்திரை செய்யவேண்டும் என்று உறுதி பூண்டார்கள். இவ்வாறு காலங்கழித்து வருவாராயினர். அவர் கீர்த்தி எங்கும் பரந்தது.

ஒருநாள் சூரியன் மேற்றிசைக் கடல்வாய் மூழ்கிய பின்னர், ஓர் அரசிளங்காளை சிறிது தூரஞ்செல்லா முன் "ஐயையோ, கள்வன்" என்னும் ஒரு அவல ஒலி கேட்டு, உடனே ஓர் அறையினுட் புகுந்து வில்லொன்றை எடுத்துக் கொண்டு மீண்டு கள்வனைத் தொடர்ந்து பற்றி, கவர்ந்த பொருளை உரியவனுக்குக் கொடுத்துச் சென்றான். இவ்வாறு இமைப்பொழுதின்கண் செய்தவன் அருச்சுனனே. இவன் வில்லுக்காகப் புகுந்த மாளிகை உதிட்டிரனும் திரௌபதியும் இருந்த கிருகமாகும். விரதம் பங்கப்பட்டதே என்று மனம் பதைத்தான். உடனே கொண்ட சபதப்படி தீர்த்த யாத்திரை செல்லப் புறப்பட்டான். தருமன் வேண்டியபடி கூறித் தடுத்தும், அருச்சுனன் கொண்ட கொள்கையை விடவில்லை. அதுகண்ட தருமன் அவனுக்கு விடைகொடுத்து, அந்தணர் பலரோடு அனுப்பினான்.

அருச்சுனன் தீர்த்த யாத்திரை சென்றபோது தான் முன்னர்ப் பன்முறையும் பலரும் பாராட்டி வியந்து கூறக் கேட்ட கட்டழகெல்லாந் திரண்டு உருவெடுத்த சுபத்திரையைத் துவாரகையிற் கண்டு மணம்புரிய எண்ணினன்.

அருச்சுனன் பல தலங்களையும், புண்ணிய நதி பலவற்றையுந் தரிசித்து ஆடி, பல இராச்சியங்களையுங் கடந்து ஈற்றில் சுபத்திரைமேல் வைத்த கழிபெருங் காதலாற் பிடர் பிடித்து உந்தப்பட்டவனாய்த் துவாரகையை அடைந்தான். சுபத்திரை கிருஷ்ணன் தங்கை. அருச்சுனன்

நகர்ப்புறத்தே வந்ததை உணர்ந்த கண்ணன் பிறர் அறியா வண்ணம் சென்று அவனைக் கண்டான். அருச்சுனன் வந்த கருத்தை வினவி உணர்ந்து, கண்ணன் அவனுக்கு ஓர் உபாயங் கற்பித்தான். "பலராமன் துறவிகளிடத்தில் மிக்க பக்தியும் பேரபிமானமும் உடையன். துறவிகளை அரண்மனைக் கழைத்து விருந்தயர்விக்கும் தன்மையன். அதனால் அருச்சுன! நீ துறவி வேடம் பூண்டால் எளிதாக உட்செல்லலாம்" என்று கூறினன்.

அவ்வாறே அருச்சுனன் அடுத்த நாள் துறவி வேடந் தரித்து, நகர்ப்புறத்தில் பாம சந்நியாசிபோல் விளங்கினான். வெயில் மழை என்ற வேறுபாடின்றித் திரிந்தான். பசி தாகம் முதலியன ஒன்றும் இன்றிக் காணப்பட்டான். இச்செய்தி பலராமனுக்கு எட்டியது. பலராமன் அவனைச் சென்று கண்டான். அரசன் என்றும் மதியாது யோகத்தில் அமர்ந்திருந்தான். தன் இல்லத்திற்கு அழைத்தான் பலராமன். அருச்சுனன் பன்முறை மறுப்பான் போன்று நடித்துப் பின் உடன்பட்டு பலராமனுடன் சென்றான். அரண்மனைக் குள்ளே ஓர் மர நிழலைத் தனக்கு உறைவிடமாக்கி யோகத்தில் அமர்ந்தான். அவனுக்கு உற்ற துணை புரியத் தன் தங்கை சுபத்திரையை ஏற்படுத்தினான். அம் மங்கையைக் கண்டதும், காதல் வெள்ளம் கரை புரள ஆரம்பித்தது. உடனே தன் வேடம் என்னும் கரையால் கட்டி நிறுத்தினான். தன் கபடத்தனம் சிறிதும் சுபத்திரைக்குத் தெரியாது தன் காலம் வரும்வரையும் நடந்து வந்தான்.

ஒருநாள் அருச்சுனன் பாண்டவர்கள் இந்திரப்பிரஸ்தம் சார்ந்த செய்தியைக் கூற, அருச்சுனன் சேமத்தை விசாரித்தான். அது அவன் அகத்தே தழலாய்க்கிடந்த

காமாக்கினிக்கு நறியநெய்யேயாக அவன் தன் வேடத்தை மறந்து சுபத்திரை ஐயுறுமாறு தன்னை வெளியிட்டான். அதுகேட்டதும், பெண்களுக்கு இயற்கையாகவுள்ள அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற நாற்குணத்தும் நாணம் மீதூரப் பெற்றவளாய் அவண் நின்றும் அகன்ருள். பின் நாணத்தால் சுபத்திரை அவன் அருகிற் செல்லாதவளாயினள். இதனை அறிந்த கண்ணன் அருச்சுனனுக்கு ஆகாரத்திற்குக் குறைவுவராமலிருக்க தன் தேவியாகிய ருக்மணி சத்தியபாமை என்பவர்களை அனுப்பினன். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி அருச்சுனனுக்கு அன்னம் மாத்திரம் படைக்கப்போனள்.

இப்படியாகச் சிலநாள் சென்றது. விழவுநாள் அடுத்தது. அதைக் காணுமாறு அந்நகர முழுதும் ஒரு கிராமத்தை அடைந்தது. நகரம் ஆள் ஒருவருமின்றி காடுபோலக் காணப்பட்டது. இச்சமயத்தை வாய்ப்பாகக் கொண்டு அருச்சுனன் சுபத்திரையை மணம் செய்து அவளைக் கொண்டு கள்ளத்தனமாக இந்திரப்பிரஸ்தம் சென்றுன். கிருஷ்ணனும் இவையெல்லாம் ஒன்றும் அறியாதவன்போல, விழா அயரப்போயிருந்தான். காவலர்கள் பலராமனிடத்திற் சென்று அறிவித்தார்கள். பலராமனுக்குச் செவியில் நாராசம் காய்ச்சி ஊற்றியதுபோல் இருந்தது. பலராமன் அருச்சுனனைக் கொண்டுவருமாறு புறப்பட்டான். கிருஷ்ணனும் முன்னே நடந்தான். சிறிது சென்றபின் கண்ணன் பலராமனை நோக்கி, "அண்ணு! பிரமனுல் விதிக்கப்பட்ட விவாகபந்தத்தைச் சிதைக்க யாவரால் ஆகும். நடந்தேறிய கருமத்திற்குத் தாக்கித்தலாற் பயனில்லை. மேலும் சுபத்திரைக்குத் தக்க மணமகன் அருச்சுனனே" என்று பலவாறு பகர்ந்து அண்ணனைச் சமாதானப் படுத்தினன். அது

கேட்டபலராமன்பகைதணிந்து பாண்டவர்களை அழைத்து மணச்சடங்கு நடத்தினன். இதுமுதலாக கண்ணனும் அருச்சுனனும் பிரியா நட்பினர்கள் ஆனார்கள்.

V

ஒருநாள் ஓர் அந்தணன் அருச்சுனனை அடைந்து, நரபட்சணம் பண்ணும் இயல்பினையுடைய அரக்கர் வசிக்கும் வனம் ஒன்று அடுத்து இருக்கிறதென்றும், அதுவே காண்டவவனமாகும் என்றும், அதை அழித்து அரக்கரை வின்னோற்றுதல் வேண்டும் என்றும் தெரிவித்தான். இவ்வாறு கூறிவிட்டுக் காண்டீவம் என்னும் வில்லையும், குறையாத அம்புக்கூட்டையும், பகைவர் பாணங்களாற்சேதிக்கப் படாததோர் இரதத்தையும் ஈந்தான். அவ்வந்தணர்பாற் கிருஷ்ணனும் ஒரு சக்கரமும் கவசமும் பெற்றான். உடனே இருவருஞ் சென்று அவ்வரக்கரை ஒழித்து வெற்றிபெற்று மீண்டார்கள். வனத்தையும் எரித்து ஒழித்தார்கள். அக்கினிதேவனே அந்தணனாகவந்து அருச்சுனனுக்கு வில் முதலியன கொடுத்தவன்.

இக்காண்டவவன தகனத்தில் பிழைத்தவன் ஒரு சிற்பாசிரியன். தனக்கு உயிர்பிச்சை ஈந்த வள்ளலாகிய அருச்சுனனை அடைந்து, தான் ஒரு கைம்மாறு யாதாயினும் ஒன்று செய்ய அனுமதி தரல் வேண்டும் எனப் பன்முறை இரந்தனன். கண்ணன் கட்டளைப்படி இந்திரப்பிரஸ்தத்தில் ஒரு மாளிகை கட்டும்படி ஏவினன். அவ்வண்ணம் யாவரும் வியக்கும்படி ஒரு அழகிய மாளிகை ஒன்றை அமைத்தான். இவ்வகையான மாளிகை இதற்குமுன்தோன்றியதே இல்லை. அம்மாளிகை முழுதும் மதிப்பில் அடங்கா நவரத்தின ஒளிவீசப் பெறுவது. மேல்விதானங்கள் நட்சத்

திரங்களையும் நாணச் செய்யும் வைரத்தினால் பதிந்து உயர்ந்த பசும் பொன்னினால் இழைக்கப்பட்டன. தூண்கள் வச்சிரக் கம்பங்கள்போல விளங்கின. கண்டோர் அதிசயித்து மயங்கத்தக்க பளிக்கறைகளும் பளிங்குமேடைகளும் அமையப்பெற்றுள்ளன. விநோதமான மாயா யந்திரங்களும் பொறிகளும் அமைக்கப்பட்டன. அவற்றுட் சில நாடக நடிப்பனவும், சில விளையாடுவனவும், சில பூத்தொடுப்பனவும், சில நீர் இறைப்பனவும், பந்தெறி வனவுமாக இன்னோரன்ன விசித்திரங்கள் எண்ணில. இவ்வாறு அமைக்கப்பெற்ற மாளிகையில் அருச்சுனனும் சகோதரரும் காலங்கழித்து வருவாராயினர்.

ஒருநாள் நாரதர் வர, பாண்டவர்கள் உபசரித்தனர். நாரதர் அவர்களிடத்தில் தந்தையாகிய பாண்டு ஏனைய அரசர்களை எல்லாம் வென்று கீர்த்திபெற்றதும், அதுபோல அவர்களும் உலகத்தவர்களுக்கும் துறவிகளுக்கும் புகலிடமாக விளங்குதல் வேண்டும் என்றும் உபதேசித்தனர். உடனே ராஜசூய யாகஞ் செய்யத் தலைப்பட்டனர். பாண்டவர்களில் தருமர் தவிர ஏனையோர் திக்கு விஜயஞ் செய்து அரசர்களை யெல்லாம் வென்றனர். அரசர்கள் எல்லாம் திறையும், பாதகாணிக்கையுங் கொண்டு கொடுத்தார்கள். ராஜசூய யாகம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இதைக் கண்டு துரியோதனன் வஞ்சனையும் பொறாமையுங் கொண்டான். பாண்டவர்க்கு குதூகலமாகிய நாள் துரியோதனுக்கு அக்கினி மூண்டு எரியும் நாளாயிற்று.

"துன்புளதெனின் அன்றோ சுக முளது" என்ற கம்பர் கருத்துக்கிசைய, அருச்சுனனாதியோர் பல துன்பங்களை நுகர்ந்து ஈற்றில் சுகத்தை அடைந்து அமர்ந்திருந்தார்கள்.

துரியோதனன் பொருமை கொண்டு "பாண்டவர்கள் நாட்டில் வாழ்வார்களானுல், நமக்குப் பெருமை இல்லை. இருந்தும் பயனில்லை. அதனுல் அவர்களை எப்படியாவது நாட்டைவிட்டு அகற்றவேண்டும்" என்று மனதில் உறுதி கொண்டான். திருதராட்டிரனிடம் துரியோதனன் "தந்தையே! யான் இருப்பதைவிட இறப்பதே நன்று" என்று கூறி, தற்கொலைபுரிய விடை தருமாறு கேட்டான். திருதராட்டிரன் துரியோதனனிடத்தில் அன்பு மிகுந்தவனுதலின், அதற்கு ஒப்புக்கொள்ளாது, விஷயத்தை அறிந்தான்.

பின் திருதராட்டிரன், கர்ணன், சகுனி, துரியோதனன் முதலியோர்கள் சூழ்ச்சி செய்து, சகுனியின் தூண்டுதலால் பாண்டவர்களைச் சூதாட அழைக்கவேண்டும் என்று ஒப்புக்கொண்டார்கள். இந்திரப்பிரஸ்தத்தில் பாண்டவர்கள் ஒரு மாளிகை அமைத்ததுபோல துரியோதனனும் அத்தினபுரத்தில் ஒரு அழகான மாளிகை ஏற்படுத்தி, அதன் கிருகப்பிரவேசத்திற்குப் பாண்டவர்களை அழைத்தான். பாண்டவர்களும் யாதொரு வஞ்சகச் சூழ்ச்சியும் மனதில் எண்ணுது வந்தார்கள்.

புது மாளிகையில் பாண்டவர்களும் மற்றவர்களும் விருந்தயர்ந்தும், பல விநோதங்கள் அனுபவித்தும் நாளைக் கழித்தார்கள். சமயம் பார்த்து, சகுனி உதிட்டிரனை நோக்கி "இதுகாறும் பல்வகை விநோதங்களால் பொழுது போக்கினேம். இனிச் சூதாடி இற்றைப் பகல் கழிக்கலாம் வருக" என்று அழைத்தான். அதற்கு இசையவில்லை. ஆயினும் சகுனியின் சுட்டுச் சொல்லால் அதற்கு இணங்கினுன் உதிட்டிரன். "விதிவழி மதி சென்றது" என்பது அறிதல்

பார்த்து மந்திரிகள் பல நீதிகளைக் கூறித் தடுத்தும், ஒன்றை யும் எண்ணாது சூதாடத் தொடங்கினன்.

சகுனியும் உதிட்டிரனும் ஆடத்தொடங்கினர். அதில் உதிட்டிரன் தனக்குரிய எல்லாவற்றையும் இழந்தான். கடைசியாக தன் மனைவியையும் பந்தயமாக வைத்து இழந் தான். உடனே துரியோதனன் மனமகிழ்ச்சி அடைந்த வனாய், துரோபதையை அழைத்துவர தன் தம்பி துச்சாதனனை ஏவினான். துச்சாதனன் தன் அண்ணன் வஞ்சகச் செயல்களுக்கு இசைந்தவனாகி, அப்பெண்மணியை கூந்தலைப்பற்றி இழுத்து வந்தான். இதைக் கண்ட பாண்டவர்களில் உதிட்டிரன் ஒழிந்த நால்வரும் மிகுந்த வருத்தத்தோடு தம் படைக்கலங்கள் எடுத்தார்கள். இதைக் கண்ட தருமன் அவர்களை அடக்கினான்.

பின் துரோபதையின் துகிலைத் துச்சாதனன் உரியத் தொடங்கினான். ஆபத்து ரட்சகனான திருமால் அவளுக்கு ஆடையைக் கொடுத்துக் காப்பாற்றினார். துச்சாதனன் கையுஞ் சோர்ந்து கீழே விழுந்தான். இந்தச் சமயத்தில் வீமன் ஒரு கொடிய சூளுறவு செய்தான். இதைக் கேட்ட சபையோர் இடியேறு கேட்ட நாகத்தினை ஒத்தனர்.

கடைசி ஆட்டமாக இழந்த நாடு நகரங்கள் பந்தய மாக வைத்து ஆடினார்கள். "பாண்டவர்கள் வென்றால் நாடு நகரங்களை அடைவார்கள் அல்லது பன்னிரண்டு வரு டம் வனவாசமும் ஒரு வருடம் அஞ்ஞாத வாசமும் செய்ய வேண்டும்" என்பதுதான் பந்தயம். அதற்கும் உடன் பட்டுச் சூதாடி உதிட்டிரன் தோற்றான். பந்தயத்தை அனுசரித்துப் பாண்டவர்கள் தமது அரசவுடைகளை எல்லாம் களைந்து எறிந்து விட்டு மரவுரி தரித்துத் தம் மனைவியோடும்

மக்களோடும், காடு நோக்கிப் புறப்பட்டார்கள். துச்சாதனன் திரௌபதியை நோக்கி "இப்பாண்டவர்களை விட்டு வேறு கணவனைத் தேடுக" என்று பார்த்துரைத்தான். அப்போது அருச்சுனன் தானும் கர்ணனைக் கொன்று ஒழிப்பது சபதம் என்று விரதங் கூறினன். மற்றைப் பாண்டவர்களும் சகுனி முதலியோரைக் கொல்வது உண்மை என்று நோன்பு பூண்டனர்.

விதுரனுடையவேண்டுகோளுக்கிணங்கிகுந்திதேவியை அவனிடத்தில் விட்டு விட்டு அடவி நோக்கி அகன்றார்கள். இவர்கள் விட்டுப் பிரிவதைக் கண்ட நகரமாந்தர்கள் ஆற்றொணாத் துயரத்தில் ஆழ்ந்தார்கள். வீதி வழியே காடு நோக்கி நடந்த பாண்டவர்களை ஜனங்கள் கண்டு "நாங்களும் நீங்கள் சென்றடையும் காட்டினை அடைந்து வாழ்வோம். கொடுங்கோன் மன்னர் வாழும் நாட்டில் கடும் புலி வாழும் காடு நன்றே" என்று கூறித் தொடர்ந்தனர்.

அவரைத் தடுத்துவிட்டுப் பாண்டவர்கள் கங்கைக் கரையை அடைந்தார்கள். சூரியனும் இந்நிலைகாணச் சகியாதவன் போன்று மேற்றிசை வீழ்ந்தான். இரவு வெண் மணலை தலையணையாகக் கொண்டு பாண்டவர்கள் துயில் கொண்டனர். பொழுது புலர்ந்ததும், தங்கள்கூட வந்த முனிவர்கட்கு எவ்வாறு ஆகாரங் கொடுப்பது என்று திகைத்து தௌமியரைக் கேட்க, அவர் சூரியனை வேண்டுமாறு பணித்தார். அங்ஙனமே சூரியனை வேண்ட அவன் ஓர் அட்சயபாத்திரம் அளித்து மீண்டான். அப்பாத்திரம் அவர்கள் வனவாச காலத்தில் பேருதவியாயிற்று.

அப்பால் அருச்சுனன் முதலியோர் வனத்திலே ஓர் ஆச்சிரமம் அமைத்துக்கொண்டு அங்கே வசிப்பாராயினர்.

முனிவர்களும் அதன் சூழலிலே சென்று உறைந்தார்கள். அதனால் அக்கொடிய வனமும் பாண்டவர்கட்கு ஓர் சிறிய நகரம் ஆயிற்று. மிருக ஒலிக்கு மாறாக வேத ஒலியே கேட்கப்படுவதாயிற்று. தீயவர்கள் உறவுக்கு மாறாக சாது சங்கமே ஏற்பட்டது. இங்ஙனமிருக்கையில் கண்ணபிரான் அருச்சுனன் முதலியோர்களை வனத்தில் கண்டு, "வேண்டுங் காலத்தில் வெளிப்பட்டுத் துணைபுரிவேன்" என்று வாக்களித்து மீண்டான்.

இவ்வாறு காலங்கழிக்கையில் துரியோதனன் பாண்டவர்களை வனத்திற்கண்டு அவமானப் படுத்தவேண்டும் என்ற எண்ணத்துடன், கர்ணன் முதலியோர் புடைசூழச் சென்றான். அவ்வனத்தை அழிக்கையில், வனத்தின் அதிபதியான சித்திராதன் துரியோதனனோடு போர் செய்து சிறை செய்தான். இதை அறிந்த பாண்டவர்களில் உதிட்டிரன் அவனைச் சிறைமீட்க மற்ற தம்பிமார்களை வேண்டினான். வீமன் " அது கூடாது. நமக்குத் தீமைசெய்தவ படவேண்டியது" என்று பலவாறு கூறினான். அதற்கு தருமன் உடன்படவில்லை. அருச்சுனன் யுத்தசன்னத்தனாய்ச் சென்று சித்திராதனோடு போர்புரிந்து துரியோதனனைச் சிறையினின்றும் விடுவித்து, தமையன் முன்னர்க் கொண்டுவந்தான். அவர்களைக் கண்டதும் துரியோதனன் வெட்கித் தலைகுனிந்தான். பின்னர் விடைபெற்றுகொண்டு தனது நகர் சென்றான்.

இவ்வாறு நிகழும் நாளில் ஒரு நாள், துரியோதனன் தங்கை துச்சளையின் கணவனாகிய ஜயித்திரதன் என்பான் பாண்டவர்கள் இல்லாத சமயம் பார்த்து, திரௌபதியை மானபங்கப்படுத்த எண்ணினான். தொடுவதற்குக் கிட்ட நெருங்குகையில் பாண்டவர்கள் சேர்ந்தார்கள். தருமர் ஒழிய

மற்றைய நால்வரும் அவனைக் கொல்லத்துணிந்தனர். தருமன் அவர்களைத் தடுத்து வேண்டிய புத்திமதிகளைப் போதித்தான். யாவரும் அடங்கினர். ஜயத்திரதன் பாண்டவர்களுக்குத் தீங்கு செய்ய நினைந்து சிவனை நோக்கிக் கொடிய தவஞ் செய்து வரங்கள் சில பெற்றான்.

அப்பால் ஒருதினம் வேதவியாசர் பாண்டவர்கள் ஆச்சிரமத்தை அடைந்தார். உதிட்டிரனை அழைத்து திவ்விய அஸ்திர சாஸ்திரத்தை உபதேசித்து "அரசனே! நீ அருச்சுனனுக்குக் கற்பித்து அவனை இந்திரன்பாலும் சிவன்பாலும் அஸ்திரங்கள் பெறுமாறு அனுப்பக்கடவை" என்று கூறிச் சென்றனர். அவ்வாறே தருமர் அருச்சுனனைத் தேவர்பால் அஸ்திரங்கள் பெறுமாறு அனுப்பினர்.

## VI

அருச்சுனன் அண்ணன் தம்பிமார்களிடத்தில் விடை பெற்றுக் கொண்டு சென்றான். இமயத்தை எய்தினான். அங்கே இந்திரகிலமலை மார்க்கத்தைத் தேடிச்செல்லும் வழியில் "நில், நில்" என்று ஒரு சத்தம் கேட்டது. உடனே அருச்சுனன் சுற்றுமுற்றும் பார்த்தான். சோதி மயமாகிய ஒரு சந்நியாசி முன் தோன்றி, "உன் வில்லை வீசிவிட்டுச் செல் இவ்விடத்தில் அச்சந் தருவது ஒன்றுமில்லை" என்று சொல்லியும், அருச்சுனன் கேளாதவனாகி, தன் வில்லோடு முன்நோக்கி நடந்தான். அப்பொழுது இந்திரன் தன்னை வெளியிட, உடனே அருச்சுனன் அஞ்சலி செய்து, "தேவ தேவ! எனக்கு அஸ்திரம் அனுக்கிரகிக்கவேண்டும்" என்றான். இந்திரன் "நீ எல்லாம் வல்ல இறைவனாகிய சிவன்பாற் சென்று அவரிடத்தில் பெற வேண்டியதைப் பெற்று மீண்டுவரும்போது நானும் தர வேண்டியதைத் தருவேன்" என்று கூறி மறைந்தான்.

அருச்சுனன் அவ்விடத்திலேயே தவஞ் செய்ய ஆரம்பித்தான். சிலநாள் கந்தமூலங்களை அருந்தி, பின் உணவின்றியும் நித்திரையின்றியும் தவங்கிடந்தான். இவ்வாறு மூன்று மாத காலம் கழிந்தது.

இங்ஙனம் பெருந்தவம் புரிகையில், துரியோதனன் அதை அறிந்து, அவன் தவத்தை அழிக்குமாறு ஓர் அசுரனை விடுத்தான். அவ்வசுரன் பன்றி உருக்கொண்டு சென்றான். பன்றி உருக்கொண்ட மூகதானவன் என்னும் அரக்கன் அருச்சுனனை அண்மினான். அடியார்கட்கு இரங்கி அருள் புரியும் அண்ணலாகிய சிவபெருமான் வேட்டுவ வடிவங் கொண்டு வந்தான். வேட்டுவ வேடந் தாங்கிய அக்கடவுளும் அப்பன்றிமேற் பாணந் தொடுக்க, அருச்சுனனும் பாணந் தொடுத்து எய்தான். பன்றி இறந்து கிடந்தது. அங்கே வேட்டுவ உருக்கொண்ட கடவுளுக்கும் அருச்சுனனுக்கும் போர் ஏற்பட்டது. கடவுள் தான் அம்பு எய்து கொன்ற பன்றிமேல் அம்பு எய்தது தகாது என்று அருச்சுனனை நோக்கிக் கூற, அருச்சுனன் "நானே அப்பன்றியைக் கொன்றேன்" என்றான். கோபத்தினால் அருச்சுனன் வில்லைக் கொண்டு அடித்தான். அவ்வடி சராசரங்கள் மேலும் அருச்சுனன் மேலும் விழுந்தது. பின்னும் சீற்றங்கொண்டு மற்போருக்கு அழைக்க, மற்போரில் கடவுள் அவனைத் தூக்கி அந்தரமார்க்கத்தில் எறிந்து, தமது மெய் வடிவத்தைக் காட்டி அருளினார். உடனே அருச்சுனன் கைகள் தலைமேல் கூப்பிய வனாய்க் கீழே வந்தான். அவனை அண்ணல் அன்புடன் தாங்கினர். உடனே அருச்சுனன் தனக்குப் பாசுபதாஸ்திரம் வேண்டும் என்று கேட்க இறைவன் இனிய முகத்துடன் அதை உவந்து அளித்தனன். அவ்வஸ்திரமானது

மிகவும் சிறப்புப் பெற்றது. உலகம் அனைத்தையும் ஓர் இமைப் பொழுதினுள்ளே அழிக்கவல்லது.

அருச்சுனன்பசுபதியினிடத்திலிருந்து பாசுபதாஸ்திரம் பெற்றதை அறிந்து, இந்திரன் பெருமகிழ்ச்சிகொண்டு, அவனைத் தனது தேவலோகத்திற்கு அழைத்துச் சென்றான். இந்திரன் தனக்கருகே ஆசனங்கொடுத்து அவனைப் பெருமைப் படுத்தினான். இப்படி எந்த மனிதனும் தேவலோகத்தில் பெருமை அடைந்தது கிடையாமதலா அவ்வுலகத்தவர் வியப்புறுமாறு அருச்சுனன் அங்குச் சகல போகங்களையும் அனுபவித்தான்.

இவ்வாறு இருக்கையில் ஓர்நாள் இரவு அருச்சுனன் படுக்கை அறைக்கு ஊர்வசி என்கிற தேவதாசி சென்றாள். அவன் அவளைக் கண்டதும், படுக்கையை விட்டெழுந்து, “தாயே! எங்கள் மூதாதையாகிய ஆயுஎன்பவர்க்கு மனைவியாயிருந்த நீ இந்நேரத்தில் இங்கு வரக் காரணம் என்ன? என்னால் ஆகவேண்டியது யாதேனும் உண்டோ?” என்று மிகப் பணிவாய்க் கேட்டான். ஊர்வசி என்பாள் வேறோர் கருத்தோடு வந்து நின்றாள். வந்த கருத்து நிறைவேறுதற்கு வழியில்லாததைக் கண்ட அவள் அருச்சுனனைக் கோபித்துப் பேசினாள். “அருச்சுனா! உன்னை விரும்பி வந்த என்னை நீ மறுக்கின்றமையால் இன்றுமுதல் பேடியாகக் கடவை” என்று கொடிய சாபம் இட்டாள். அவ்விடத்தை விட்டு அகன்றாள். அவன் உடனே பேடி உருவம் அடைந்தான். வெட்க முற்று, வெளியே வராது தன் அறைக்குள்ளேயே நின்றான். அப்பொழுது இந்திரன் இச்செய்தியை அறிந்தான். தேவேந்திரன் வருத்தம் அடைந்து ஊர்வசியை அழைத்து அவளைச் சமாதானப்படுத்தி, அருச்சுனன் சாபத்தை நீக்குமாறு வேண்டினான். அவள் “அருச்

சுனன் எப்பொழுது பேடி உருவம் அடைய விரும்புகிறானோ அப்பொழுது அந்த உருவம் உண்டாகக் கடவது" என்று கூறி சாபத்தை நீக்கினள்.

பின்னர் இந்திரன் அருச்சுனனைத் தன் சபைக்கு அழைத்துச் சென்று ஆசனத்தில் இருத்தி அவனுக்குத் தன் மகுடத்தைச் சூட்டினான். பின் 'கிரீடி' என்று அவனை அழைத்தனர். பின்னர் இந்திரன் அருச்சுனனைப் பார்த்து, "அருச்சுனா! நிவாதகவசர்கள் என்று மூன்று கோடி அசுரர்கள் இருக்கிறார்கள். ஒன்றாலும் கெடாத கவசமுடையர்கள், அந்தப் பாவிகள் என்னுடைய பகைவர்கள். அவர்களை வதஞ்செய்தல் வேண்டும்" என்றான்.

அருச்சுனன் மிக அகமகிழ்ந்து ஆனந்தம் அடைந்து போருக்குப் புறப்பட்டான். நால்வகைச் சேனைகளோடும் அருச்சுனன் அவ்வசுரர்களின் நகரமாகிய தோயமாபுரத்தை அடைந்தான். அடைந்த மாத்திரத்தில் தன் கைக்காண்டீவத்தை வளைத்து திசைகள் எட்டும் செவிடுபட நாணேற்றினான். அந்த ஓசை அசுரர்களின் செவியிற்பட்டது. அவர்கள் ஆரவாரித்தார்கள். அப்போது அருச்சுனனால் விடுக்கப்பட்ட தூதன் "அரசர்களை எல்லாம் வென்று இராஜசூய யாகம் முடித்தவனும், காண்டவ வனத்தை அக்கினி பகவானுக்கு உணவாகக் கொடுத்தவனும், தவம் இருந்து சிவனிடம் பாசுபதாஸ்திரம் பெற்றவனுமாகிய அருச்சுன மகாராஜா உங்களோடு அமர்ஆட அண்டினர்" என்று கூறி முடித்தான்.

இதைக் கேட்டவுடன் அசுரர்கள் கைகொட்டி நகைத்து, போருக்கு சித்தம் ஆனார்கள். இருவருக்கும் போர் மூண்டது. அருச்சுனன் காண்டீபத்தில் அம்புகளைத்

தொடுத்து விட்டான். ஒருவனே மூன்றுகோடி அசுரர் களுக்கு எதிராக நின்று போர் புரிந்தனன். மாண்ட அசுரர் கள் எல்லாம் உயிர்பெற்று எழுந்தனர். இதைக்கண்ட அருச்சுனன் ஓர் உபாயஞ் செய்தான். சாரதியிடத்தில் "இரதத்தை முன்னே ஓட்டுவதுபோல் நடத்திப் பின் னுக்கு நடத்தவேண்டும்" என்றான். அவ்வாறே அவன் செய்ய, அருச்சுனன் ஈசனைத் தியானித்து மந்திரம் உச்ச ரித்து பாசுபதாஸ்திரத்தை விட்டான். அது எல்லா பேரை யும் அதம் ஆக்கிவிட்டுத் திரும்ப அவனிடத்தில் அடைந் தது. பாசுபதாஸ்திரத்தின் மகிமைதான் என்னே!

பின்னர் காலகேயர் என்னும் அறுபதினாயிர அரசர் கள் இருக்கின்ற இடத்தை அடைந்தான். காலகேயர் களின் கொடிய செயல்களைப்பற்றியும், அவர்கள் பிரமனை நோக்கித் தவஞ்செய்து பெற்ற பெருமையைப்பற்றியும் சாரதி அருச்சுனனுக்கு எடுத்துச் சொன்னான். உடனே அருச்சுனன் தன் வில்லை வளைத்து நாணேற்றி ஓசை உண்டுபண்ணினான். இதைக்கேட்டதும் காலகேயர்கள் அவனை வளைந்து கொண்டார்கள். அருச்சுனன் பல பாணங்களை ஒன்றின்பின் ஒன்றாக எவினான். அவைகளைத் தடுத்து அசுரர்கள் அவனை நெருங்கினார்கள். உடனே அருச்சுனன் பல தெய்வ அஸ்திரங்களைவிடடான். அவை கள் அந்தரத்தில் எழும்பி, கோடையிடிகளைப்போல் ஆர்ப் பரித்துக்கொண்டு பற்பல ஆயுதங்களை மழையைப்போல் சொரிந்து அவுணர்களையும், அவர்கள் பரிவாரங்களையும் அத மாக்கின. அப்பொழுது அவுணர்களிற் பெரும்பாலார் அந்தரத்தில் எழுந்து அருச்சுனன்மீது மாயா சம்பந்த மான அநேக பாணங்களைப் பொழிந்தனர். உடனே அருச்சுனன் பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தான்.

அது அநேக ஆயிரம் ஆயுதங்களாகி வான் எங்கும் பாவி அவுணர்களை யெல்லாம் கண்டதுண்ட மாக்கிவிட்டு அருச்சுனனுடைய அம்பறாத் தூணியில் வந்து சேர்ந்தது. இதைக் கண்ட தேவர்கள் மலர்மாரி பெய்தார்கள். 'விஜயன்' என்ற பெயரையும் சூட்டினார்கள்.

இந்திரன் இவ்வாறு வெற்றி பெற்று வருவதை அறிந்து அருச்சுனனை எதிர் கொண்டு அழைத்துத் தன் நகரத்திற் குட் பிரவேசித்தான். தன் ஆசனத்தில் இருக்கச் செய் தான். பெரிய மரியாதைகள் எல்லாம் பெற்று அருச்சுனன் இந்திரனோடு சுகமாய் இருந்தான்.

பின்னர் ஒருநாள் அருச்சுனன் தன் சகோதராரிடம்போக அனுமதி தரவேண்டும் என்று இந்திரனைக் கேட்டான். அப்போது இந்திரன் "அப்பா! நீ இன்னும் சிலகாலம் இங்கிருக்க வேண்டும். அஞ்ஞாதவாசத்திற்கு உபகாரப் படக்கூடிய ஒரு சாஸ்திரம் நீ கற்க வேண்டும். அதுதான் பரத சாஸ்திரம். அது நாரதரிடத்திலேயே கற்க வேண்டும். உன் சேமத்தைப்பற்றித் தெரிவிக்க யான் உரோமசன் மாவை அனுப்புகிறேன்" என்றான். அவ்விதமே அருச் சுனன் சம்மதிக்க நாரதரிடம் ஒப்புவிக்கப்பட்டான்.

சிறிது நாள் அங்கிருந்து பரத நாட்டியம் பயின்றுவிட் டுத் தன் சகோதரர்களைக் காண அவாக் கொண்டனன். அப்போது தரும புத்திராதியர்கள் தீர்த்த யாத்திரையாக கந்தமாதன பர்வதத்தை அடைந்திருந்தனர். இந்திரன் அருச்சுனனைக் கூட்டிக்கொண்டு தரும ரிருக்கும் ஆசிர மத்தை அடைந்தான்.

அருச்சுனனையும் இந்திரனையும் கண்ட உதிட்டிரன் முதலியோர்கள் கவலை நீங்கி பெரு மகிழ்ச்சியுடன் வரவேற்

ரூர்கள். யாவரும் கொண்ட ஆனந்தத்தை அளவிட்டு உரைக்கலாமோ? இந்திரனுக்கு வேண்டிய மரியாதைகள் செய்து யாவரும் வீற்றிருந்தனர். அப்போது இந்திரன் "இனி உங்கட்கு எந்தக் குறையும் வராது. அருச்சுனன் தவத்தினால் சிவபெருமானிடம் பெற்றுக்கொண்டு வந்திருக்கும் பாசுபதாஸ்திரத்தின் முன் நிற்க வல்லவர் மூவுலங்களிலும் கிடையாது." என்று கூறி, தான் அவ்விடம் விட்டு அகன்றான்.

பின் தருமர் முதலியோர் அருச்சுனனிடம் அவன் இந்திர லோகஞ் சென்றுவந்த வரலாற்றைக்கேட்டு ஆனந்தம் அடைந்து இன்புற்றிருந்தார்கள். எல்லோரும் பரமசிவனையே நேரிற் கண்டு தரிசித்ததுபோல மனமகிழ்ந்து அருச்சுனனைப் புகழ்ந்து வாழ்த்தினார்கள்.

## VII

பன்னிரண்டு வருட வனவாச முடிதற்குச் சில தினம் உளவென்னுமளவிலே, ஒருநாள் தமது தீக்கடை கோலை ஒரு மான் தன் கொம்பிற் சிக்கிக்கொண்டு ஓடக் கண்ட ஒரு முனிவர் பாண்டவர்க்கு முறையிட்டனர். பாண்டவர்கள் அம்மானைத் தொடர்ந்து போய்க் கொடிய காட்டிற் புகுந்தார்கள். வெயிற் கொடுமையாற் சோர்ந்து நீர் வேட்கையுற்று வீழ்ந்தார்கள். நகுலன் சுற்றும் முற்றும் பார்த்தான். சிறிது தூரத்தில் ஓர் அழகிய தடாகத்தைக் கண்டான். உடனே தண்ணீர்வேட்கை தீர்த்தற் பொருட்டுச் சென்றான். அதனைக் குடித்து மாண்டான். அவனைத் தேடிச் சென்ற சகாதேவன், அருச்சுனன், வீமன் முதலியோரும் அவ்விதமே மாண்டார்கள். கடைசியாக உதிட்டிரன் அவர்களைத் தேடிச்சென்றான். ஓர் அசரீரி "யான்

கேட்கிற வினக்கட்கு விடை கூறிவிட்டு நீர் அருந்துவாய்'' என்றது.

அவ்விதமே அதுகேட்ட கேள்விகளுக்கெல்லாம் தக்க விடை அளித்தான். மகிழ்ச்சி எய்தி யாவரையும் உயிர்பெற்று எழ அனுக்கிரகித்தது அவ்வசரீரி. காலக் கடவுளே இவ்வாறு செய்தது. துரியோதனன் பாண்டவர்களைக் கொல்வதற்காக காளமா முனியை அழைத்து ஏற்பாடு செய்தான். அம்முனி காட்டிற் சென்று ஒரு பெரிய ஓமம் வளர்க்க, அதினின்றும் ஒரு பூதம் புறப்பட்டது. அப் பூதம் பாணடவர்களை நோக்கி வந்தது. அப்போது பாண்டவர்களில் தருமர் ஒழிந்த மற்றைய நால்வரும் அக்குளக் கரையில் மாண்டு கிடந்தார்கள். அதைக் கண்டு அப்புறம் அவர்களைக் கொல்லாது, திரும்பிச் சென்று அம்முனியையே கொன்றது. இவ்வாறு இவர்கள் அப் பூதத்தினின்றும் தப்பியது அக்காலக் கடவுளாலேயே. நல்லார்க்குதவி செய்யாதாரும் உளரோ? காலக்கடவுள் வெளிப்பட்டு "அஞ்ஞாதவாசம் இடையூறின்றி முடிக்க'' என்று ஆசிர்வதித்து மறைந்தனன்.

பின் பாண்டவர்கள் வனத்திலும், மலையிலும் தீர்த்தக் கரையிலும், கோயில்களிலும் பன்னீராண்டும் ஒருவாறு கழித்தார்கள். பாண்டவர்க்குப் பன்னீராண்டு வனவாசமும், துன்பமும் பொன்னைப் பசுந்தங்கம் ஆக்குமாறு செய்யப் படும் அக்கினியைப்போல் ஆயினமையின், அவர்கள் குறைகள் எல்லாம் தீர்ந்து நிரம்பிய அறிவும், நிரம்பிய வலிமையும், நிரம்பிய வரப்பிரசாதங்களும், நிரம்பிய மனத் தூய்மை உடையவர்களாய் விளங்கினர். இவ்வாறு வனவாசத்தை இனிதாய்க் கழித்துவிட்டுஅஞ்ஞாதவாசந் தொடங்கப் புறப்பட்டார்கள்.

பன்னிரண்டு ஆண்டுகளும் பன்னிரண்டு மாதங்களாகச் சென்றன. இனி அஞ்ஞாதவாசத்துக்குரிய பன்னிரு மாசங்களும் பன்னிரு ஆண்டுகளாகக் காணப்பட்டன. யாவருங்கூடி விராடதேசத்தில் சேர்ந்து உறையவேண்டும் என்று தீர்மானித்தார்கள். துரியோதனனுடைய பகை நாடு ஆனதால் அவன் எளிதில் அவர்களைக் கண்டுபிடிக்க மாட்டான் என்று எண்ணித் துணிந்தார்கள். பாண்டவர்களும் திரௌபதியும் மாறுவேடம் பூண்டு அந்நகர் புக எண்ணினர்கள். அப்பொழுது தங்கள் ஆயுதங்களை ஓர் அடர்ந்த வன்னிமரப் பொந்தில் வைத்தார்கள்.

பின் ஒவ்வொருவரும் தனித்தனி விராட நகரை அடைந்தனர். தருமர் விராடனிடம் சென்று தன் பெயர் கங்கபட்டர் என்று சொல்லி, விராட அரசனுக்குக் குருவாக அமைந்தான். பின்னர் வீமன் சென்று தன் பெயர் பலாயனன் என்றும், தான் வீமனோடு இருந்து மடைத் தொழில் செய்தோன் என்றும் கூறி அவ்வரசனிடம் அமர்ந்தான். இரண்டு தினஞ் சென்றபின்னர் அருச்சுனன் தன்பெயர் பிருகந்நளை என்று சொல்லி பேடி உருவத்தோடு அந்தப்புரத்தில் அமைந்தான். இவ்வாறே நகுலன் சகாதேவன் இருவரும் குதிரை வைத்தியனாகவும், இடையனாகவும் அமர்ந்தனர். தாமக்கிரந்தி என்றும், தந்திபாலன் என்றும் பெயர்கொண்டார்கள். கடைசியாக திரௌபதை விரதசாரணி என்னும் பெயரோடு விராடன் தேவி இருக்கும் மாளிகையில் வண்ண மகளாக அமர்ந்தனள்.

இங்ஙனமாகப் பாண்டவர்கள் விராட தேசத்திலிருந்து காலங் கழிக்கு நாளில் ஒருநாள் விராட அரசனின் தேவிக்குச் சகோதரனான கீசகன் வண்ண மகளாகிய திரௌபதியின்மேல் ஆசை கொண்டான். இதைத் திரௌபதி வீம

னுக்கு அறிவித்தாள். வீமன் சூழ்ச்சியால் கீசகனைத் தனி யிடத்தில் வைத்துக் கொன்றுவிட்டுப் பிறர் அறியாவண் ணம் தன் படுக்கை யறைக்குப் போய்ச் சேர்ந்தான். இச் செய்தி துரியோதனனுக்கு ஒற்றரின் மூலமாக எட்டியது. உடனே அவன் பாண்டவர்கள் விராட நகரிலேயே இருக் கிறார்கள் என்பதை அறிந்தான். அஞ்ஞாத வாசத்துக்குக் குறிப்பிட்ட நாளுக்கு முன் கண்டுபிடித்தால், மறுபடியும் பன்னிரண்டு யாண்டு காடாளவும், ஒரு யாண்டு மறைந்து நாட்டில் உறையவும் செய்யவேண்டும். அதற்காக விராட நகரில் உள்ள நிரைகளைக் கவர்தற்கு வீரர்களை அனுப் பினான்.

துரியோதனன் தென் பக்கத்திற்குத் திரிகர்த்தனைத் தலைவனாக்கி ஒரு சேனையை அனுப்பினான். தான் வட திசை ஆநிரையைக் கவர்ந்தான். திரிகர்த்தன் விராடனைத் தோற்கடித்து அவனைச் சிறையிட்டான். உடனே வீமன் எழுந்து அவனைச் சிறைமீட்டு திரிகர்த்த சேனை யைத் தோற்கடித்தான். விராடன் மிக்க களிப்புடையவ னாகி தன் நகருக்கு மீளாது போர்க்களத்திற்குச் சமீபத் தில் ஒரு சோலையில் தங்கினான். கூட கங்கபட்டர் என்ற தருமரும் உண்டு.

துரியோதனன் வடதிசையைத் தாக்க இதை அறிந்த உத்தரன் மிகுந்த வருத்தத்துடன் "தனக்குத் துணையாக ஓர் தேர்ச் சாரதி யில்லையே" என்று வருந்தினான். உத்த ரன் விராடன் மகன். உடனே திரௌபதி பேடி உருக் கொண்டு பிருகந்நளை என்ற பெயர் புனைந்த அருச்சுனனின் தேர்ச் சாரத்தியத்தை வியந்து பாராட்ட உத்தரன் தனக் குத் தேர்ச் சாரதியாக வைத்துக்கொண்டான். பிருகந்நளை தேர் செலுத்துஞ் சாமர்த்தியத்தை உத்தரன் கண்டு அதி

சயித்துச் சென்று துரியோதனன் சேனையைக் கண்டான். உடனே உத்தரன் கை நடுங்கவும், கால் நடுங்கவும் கருத் தழிந்து மெய் நடுங்கவும் நாப்புலர்ந்து உயிர்ப்பு மேல் விஞ்சிச் சொல் நடுங்கவும் சுடர் முடி நடுங்கவுஞ் சோர்ந் தான்.

அப்போது சாரதி

"அஞ்சல் அஞ்சல் நீபகைவரை ஆருயிர் அடுதல்
துஞ்சல் என்று இவை இரண்டலால்துணிவு பேறுண்டோ
வெஞ்சமந்தனில் வந்து புண்படாது இனி மீண்டால்
வஞ்சநெஞ்சுடைய வஞ்சியர் என்சொலார்"

என்று கூறித் தேற்றவும், தேருளுகி, "மீண்டு போவதே உறுதி" என்றனன் இகல்வீரன். இவ்வாறு கூறி கொடித் தடந்தேரின் நின்று உகைத்து முன்குதியா, அடித்தலம் பிடர் அடித்திட ஓடலும், அவனைத் தொடித்தடம்புயம் இரண்டையுந் தொடர்ந்து போய்த் துவக்கிப், பிடித்து வந்து ஒரு நொடியினில் தேருடன் பிணித்தான் சாரதி யாகிய அருச்சுனன்.

அருச்சுனன் உத்தரனைப் பிணித்த தேரைப் பெற்ற மும் பிற்படக்கடாவி வன்னிப் பொதும்பரில் சேர்த்து வைத்த சிலையும் அம்பும் கணித்த எல்லையிற்கொண்டு மீண்டு அமர்க்களம் புகுந்தான். உத்தரன் பேடியைப் பார்த்து இப் படை யாவை எனக் கேட்க, அருச்சுனன் "இவை கிரீடி யைச் சேர்ந்தவை" என்றான். கிரீடி எங்குளன் என்று கேட்ட உத்தரனை நோக்கி, "இருடியாகி நின் தாதை ஓர் ஆசனத்திருக்கும் புருடன் இப்பதி புகுந்தநாள் வந்துடன் புகுந்து, விதியினால் பேடியும் ஆனான்" என்று கூறினான் அருச்சுனன். "அவ்வருச்சுனன் இன்னும் நான்கு நாழிகை

அளவில் தோன்றுவான்" என்று கூறி உத்தரனைத் தேர் விடும்படி தூண்டினன். உடனே உத்தரன் அறிந்து தான் விழுந்து எழுந்து பின் அவன் அருளால் மாபெருஞ் சிறப்பை அச்சிறுவனும் பெற்றுத் தேர்விடு தொழிலில் மூண்டான்.

அருச்சுனன் வருகின்ற வீரப் பொலிவையும் தேரிலே உத்தரனும் அருச்சுனனும் ஆசன மாறிக்கொண்டதையும் தேர் செலுத்தப்படுகின்ற பக்குவத்தையும் வீடுமர், துரோணர்கள் ஊன்றி நோக்கினர்கள். அருச்சுனனை அவன் செயல்களாலும் ஆண்மையாலும் அவர்கள் அருச்சுனன் என்றே துணிந்தார்கள். அவர்கள் "அன்று போலவன் அருச்சுனன், அம்பிகாபதி பால்துன்று போர்புரி தவத்தினல் சுடுகணை பலபெற்று, அன்று போரில் அவுணரை அமரருக்காக வென்று போனகம் நுகர்ந்து பொன்மலர் வேய்ந்து விளங்கினன்" என்றார்கள்.

வீடுமர், துரோணர் முதலியோர் துரியோதனனைப் போர் செய்யாது தடுக்க, கர்ணன் எழுந்து, "தேரும் அங்கொரு தனித்தேர், தேரின் மேல் நின்று வீரவெஞ் சில வளைத்தகை வீரனும் பேடி யாரும் நெஞ்சழிந்து அஞ்சுவது என்கொல்" என்று இசைத்தான். அவனல் துரியோதனன் வீடுமர் பேச்சுக்களைக் கவனியாது போர் தொடுத்தான்.

வீடுமர் முதலியோர் உரியநாள் வருமுன்னே அருச்சுனன் வெளிப்பட்டுவிட்டானே என்று ஐயுற்று காலகணிதம் பார்க்க, முந்திய தினமே அஞ்ஞாதவாசத்துக்குரிய நாள் சென்றது என்று கண்டு மகிழ்ச்சி அடைந்தார்கள். அருச்சுனனை முகக்குறிப்பினல் வாழ்த்தினர்கள். அருச்சு

னனும் அக்குறிப்புணர்ந்து பாரவைக்குறிப்பினுல் தன் உவகையை வெளியிட்டான்.

துரியோதனன் வீரர்கள் ஆநிரைகளைக் கவர்ந்து கொண்டு போக, உடனே அருச்சுனன் வெம்பூசலும் பொருது தூசிறத்து இளங்கன்றுடைத் தொறுக்களை மீட்டான். அவன் பக்கலிலுள்ள கோபாலர்கள் வெந்தநெய்யினில் பால்துளி உகுத்தென ஆர்த்தார்கள். கடிகை நான்கு சென்ற பின் உருப்பசி அன்று இட்ட சாபமும் நீங்க, கொடியின் மீது எழும் அநுமனைக்குறிக்க அக்கொடியும் தன் தனி இரதமும் முன் வரக்கண்டான். உரியதேரினை மீது கொண்டு உத்தரன் செலுத்த, கரிய மேனியன் செய்ய தாமரைத் தடங்கண்ணன் வளைந்த சிலையை உடையவனுய் நின்றுன். துரியோதனன் பக்கலிலுள்ள வீரர்கள் பெரும் பாலோர் பட்டொழிந்தனர். அவனுக்கு எதிர் நிற்காது துரியோதனன் ஒடத்தலைப் பட்டான்.

ஒடுகின்ற துரியோதனனைப் பார்த்து,

"கார்முகந் கைத்தலத் திருப்பக் கைம்மிகு
போர்முகந் தன்னில்நீ புறந்தந்து ஏகினுல்
ஊர்முகக் களிற்றின்மேல் உலாவும் வீதியின்
வார்முகக் கனதன மாதர்என் சொலார்"

"உன்பெருந்துணைவ ரேடுன்னை ஓர்கணத்து
என்பெருங் கணைகளுக்கு இரைக ளாக்குவேன்
வன்பெருங் கொடிமிசை மடங்க லேற்றினுன்
தன்பெரும் வஞ்சினம் தப்புமே கொலாம்"

"இரவலர் இளையர் எத்து நாவலர்
விரவிய தூதுவர் விருத்தர் வேதியர்
அரிவையர் வெஞ்சமர் அஞ்சுவோர் பெருங்
குரவர்என்று இவர்களைக் கோறல் பாவமே"

என்று இவ்வாருக அருச்சுனன் கூற, கர்ணன் அவன் முன் தோன்றி "என்னுடன் மலைக்கவா" என்று அழைத்தான். அப்போது மதம்பொழிகளிற்றை விட்டு, கொடுவரியின் மேல் ஓடும் யாளிபோல், வந்து போர் இரக்கும் அக்கர்ணன் மேல் இரதம் ஏவினான்.

இருவரும் எதிர் எதிர் ஏவும்வாளியால் வெருவரும் இருளுற விசும்பு தூர்ந்தது. அமர் நெடும்போது தாக்கியும், ஒருவரும் இளைத்திலர். ஒத்த ஆண்மை உடையராகக் காணப்பட்டார். பின்னர் சுவேதவாகனன் மூன்று கோல் விட கர்ணன் பாகுதேர் அற்று ஒருவினன். பின்னும் வந்து பொர இரண்டா முறையும் அவனை ஓட ஓட தோற்கடித்தான் அருச்சுனன்.

பிறகு துரோணர் எதிர்த்து வர அருச்சுனன் அவர் அடிவணங்கி "யாதும் ஒன்று அறியா என்னை இவன் அலாது இல்லை என பேதினி மதிக்குமாறு வில்முதற் படைகள் யாவுந்திகறத் தந்த உண்மை தெய்வமே! உன் பாதத்திற் பிழை செய்வது பஞ்சமா பாதகத்தில் ஒன்று" என்று கூறினான். பின்னும் அருச்சுனன் "அரவுயர்த்தகோவோடு போர் புரிய ஒருப்பட்டேனே ஒழிய, உம்மொடும், கிருபாசாரியரோடும், அசுவத்தாமாரோடும் வீடுமரோடும் போர் புரியேன்" என்று இசைத்தான். இதைக்கேட்டு துரோணர் "செஞ்சோற்றுக் கடன் கழித்திடுதல் வேண்டும். மேலும் தேவர் தம் பகையை வென்ற வெம்முனை காணுமாறு வில் விளைத்திடுக" என்றார். உடனே இருவரும் அம்பு தொடுத்து எய்தார்கள். அவ்வம்புகள் ஒன்றுக்கொன்று மோதினவே தவிர இருவர்மேலும் பட்டில. சிறிது நேரஞ் சென்றதும் துரோணரின் கொடி, புரவி, சாரதிகள் இவை

கள் அற்றுவிழும்படி செய்ய, ஆரியாகிய துரோணர் முதுகிட்டார்.

பின்னர் தன் தந்தை ஓடியதைப் பார்த்து அசுவத்தாமா அருச்சுனனை எதிர்த்தான். இருவரும் பொருதனர். கடைசியாக சந்திரமௌலி கொடுத்த அம்பை அருச்சுனன் விட அசுவத்தாமாவும் ஓட்டம் பிடித்தான். கிருபனும், நிருபர்களும் இவ்வாறே போர் செய்து தோற்று ஓடினர்கள்.

பின்னர் வீடுமன், விதுரன், துரியோதனன், சிந்து ராயன் முதலியோர் வந்து நாற்புறமும் அருச்சுனனைச் சூழ்ந்துகொண்டனர். அவர்கள் பகழிவந்து தன் மேல் பட...ா வண்ணம் தன்னைக் காத்துக்கொண்டு பகழி கோத்தான். மோகனக் கணையொன்று ஏவிய யாவரையும் முடியடி படிக்கண் வீழ்த்தான். அவர்கள் மூர்ச்சை தெளிந்து மீண்டார்கள். பின் அடலுடை விசயன் ஒற்றை அம்பினல் மீண்டுஞ் சென்று பட அரவு உயர்த்த கோவை மகுடபங்கம் பண்ணினன்.

துரியோதனன் "வல்லினில் அழிந்து நின்முன் மன்னவை தன்னில் அன்று சொல்லிய காலஞ் செல்லா முன் இவர் தோன்றினர். புல்லியகானில் இன்னம்போக நீ புகறி" என்றான். இது கேட்ட வீடுமன் "இன்னலே இழந்தோர் காலம் இந்துவின் இயக்கந் தன்னல் நென்னலே சென்றது" என்றான். இதைக் கேட்ட சுயோதனன் இரவிடையாருந் துஞ்சதன் நகரிபுக்கான். இவ்வாறு வெற்றிகொண்டு அருச்சுனன் ஜயபேரி முழக்கினன். பின் அருச்சுனன் தனது தேரைத் திருப்பிக்கொண்டுபோய் வன்னி மரத்திலே தனது வில் முதலியவற்றை வைத்துவிட்டு, உத்தரனைத் தன்னாசனத்திருத்தித் தான் முன்போற் பேடி உரு

விங் கொண்டு சாரதியாகத் தன்னை வெளியிடா வகை உத்தரனுக்குக் கற்பித்து விராட நகரை நோக்கி மீண்டான்.

உத்தரன் அனுப்பிய தூதர் விராடனிடத்தில் வந்து உத்தரன் வென்றவாறும் தொறுநிரை மீட்டவாறுந் தொழுது சொன்னர். உடனே விராடன் தன் மகனை எதிர்கொண்டு அழைத்துவர தன் பரிவாரங்களை அனுப்பினன்.

"சோரர்தங் கருவைத் தங்கள் கருவெனத் தோளி லேந்தி
ஆர்வமுற் றூடுருகு நெஞ்சின் அறிவிலார் தம்மைப் போல,
வீரன் (பேடி) வெஞ்சமரம் வெல்ல விராடன் உத்தரன் வென்
[றான் அப்
போரினை என்ற மேனி புளகெழப் பூரித் தானே."

"மகன் வருமளவும் வெஞ்சூதாடுதும் வருக" என்று கூற, அகமகிழ்ந்து வேந்தன் அந்தணனுகிய கங்கபட்டன் தன்னோடு ஆட, அப்போது முனி அடுத்து வெல்ல, "உத்தரன் முன் மேவார் இகல் அழிந்ததுபோல் இப்போரில் நீ அழிவாய்" என்று கூறினன் விராடன். முனி "வென்றது பேடியே. நின் சிறுவன் வல்லவனே" என்று கூற, விராடன் கோபங்கொண்டு முனியின்மேல் சூதாடு கவற்றை எறிய, அது நெற்யிற் பட்டதால் நெற்றியினின்றும் குருதி கொப்புளித்தது. உடனே அருகிலிருந்த வண்ணமாது மல்கிய குருதியை மாற்றினள். இது நிகழும்போது உத்தரனும் வந்து சேர்ந்தான். உத்தரன் இதை அறிந்து வருந்தி,

"செறுப்பது பெருமை யன்று சிறியவர் செய்த தீமை
பொறுப்பதே பெருமை என்று பூசுரன் பாதம் போற்றி
வெறுப்பது விளைத்த தாதை வீழ்ந்தபின் தானும் வீழ்ந்து
மறுப்பது புரியா ஞானி மனத்துனி அகற்றி னனே."

பின் உத்தரன் "போர்க்களத்தில் நிகழ்ந்த செய்தியை வென்றது பேடியாகிய அருச்சுனனே" என்றான்.

பின் உத்தரன் "அருகுவிடாது உமக்கு உயிர் நண்பாகி அறம் உரைப்போன் அறத்தின் மகனாக வேண்டும். வண்ணமகள் பாஞ்சாலன் மகளே. மடையன் தனை வீமன் என அயிர்க்கின்றேன். மாவலான் நகுலனாகும். நிரைகாவலன் சகாதேவனாகும்" என்று கூறினான்.

பாண்டவர்களும் தங்கட்குரிய காலம் முடிந்ததால், உண்மை வடிவத்தேந்தி வெளிப்பட்டு சபாமண்டபத்திற் சேர்ந்து இருந்தார்கள். அவர்களைக் கண்ட மாத்திரத்தில் விராடன் மிக அகமகிழ்ந்தான். இவ்வாறு வெளிப்பட்ட பாண்டவர்களைக் காணுமாறு கண்ணன், அபிமன்னியு, சுபத்திரை முதலிய பலர் விராட ராஜதானியை அடைந்தனர். பாண்டவர்கள் சம்மதப்படி விராடன் தன் புத்திரி உத்தரையை அபிமன்னியுவுக்கு மணத்திற் கொடுத்தான். இதோடு பாண்டவர்களுடைய பதின்மூன்றுவருட கஷ்ட காலமுந் தொலைந்து சுபகாலந் தொடங்கியது.

## VIII

இவ்விவாக நடந்த பின்னர் அங்குச் சென்றிருந்த அரசரெல்லாம் அடுத்தநாளிலே சபாமண்டபத்திற் கூடிப் பாண்டவர்கள் இனிச் செயற் பாலது யாதெனச் சிந்திப்பாராயினர். உடனே கண்ணபிரான் எழுந்து "தூது போக்கி யாம் துரியோதனனின் கருத்தை அறியவேண்டும். பின்வேண்டியதைச் செய்ய ஆலோசிப்போம்" என்றனன். யாவரும் உடம்பட உலூக மாமுனியைத் அத்தினபுரத்துக்குத் தூதாக அனுப்பினர். கிருஷ்ணனும் பாண்டவர்பால் விடைகொண்டு துவாரகைக்குச் சென்றான். இது நிற்க.

பாண்டவர்களின் முயற்சிகள் அனைத்தையும் அறிந்து கொண்ட துரியோதனன் சபை கூட்டிப் "படைத்துணைவர்கள் சேர்க்கின்றனர் : நாமும் சேர்க்கவேண்டும்" என்று பேசித் தீர்மானித்துக் கிருஷ்ணபகவானுடைய துணையைப் பெற இரதகஜ துரகபதாதிகளுடன் புறப்பட்டுத் துவாரகை போனான். இதை அறிந்து கொண்ட பகவான் உடனே அருச்சுனனை அழைத்து வரும்படி தூதனுப்பி விட்டு, காவலரை நோக்கித் "துரியோதனன் வருவான். வந்தால் தடை செய்யாமல் என் பள்ளியறைக்கு அனுப்பிவிடுங்கள்" என்று கட்டளையிட்டுப் பள்ளியறைக்குப் போய் யோக நித்திரை கொண்டார்.

துரியோதனன் கண்ணபிரானுடைய அரண்மனையை நெருங்கியதும் தன்னுடன் வந்த படைகளை வெளியிலேயே நிறுத்திவிட்டு, தான் மாத்திரம் தனியே அரண்மனைக்குள் பிரவேசித்து, கண்ணன் நித்திரை செய்வது பார்த்து, அவரை எழுப்பவேண்டாம், என்று எண்ணி, திருவடிக்கருகேயுள்ள ஆசனத்தைத் தலைப்பக்கம் இட்டு அதில் அமர்ந்தான். அருச்சுனன் வந்து திருவடிப் புறத்தில் மண்டியிட்டமர்ந்து இரு கரங்களினாலும் இதழ்விரிந்த தாமரை போன்று இலகும் அவருடைய அந்தத் திருவடியை வருடிக்கொண்டிருந்தான்.

பின் சற்றுநேரத்திற்கெல்லாம் பகவான் நித்திரை தெளிந்தவர் போல் கண்மலர்ந்து கால் புறத்தில் இருக்கும் காண்டீபனைப் பார்த்து புன்முறுவலுடன் சேமத்தை விசாரித்து விட்டு "உன் மனோ எண்ணம் நிறைவேறக்கடவது" என்று ஆசிர்வதித்தார். துரியோதனன் வந்திருப்பதை உணர்ந்து "யாது காரியமாக நீங்கள் இருவரும் வந்தீர்கள்" எனக் கேட்டார். அப்போது பாரதப் போரில் அவரைப்

படைத்துணையாக அழைக்க வந்திருப்பதாகக் கூறினான் அரவக்கொடியோன். அருச்சுனனும் அவ்வாறே இயம்பினான். உடனே கண்ணன் துரியோதனனைப் பார்த்து,

“நீவிரிருவரும் எனக்கு இருபுயம் போன்றவர்கள். ஆதலால் இருவரும் எனக்குச் சமமே. ஆனால் அருச்சுனன் முதன் முதலில் என் விழிக்கு இலக்கானான். அதனால் அவனுக்கு ஆசிர்வதித்துவிட்டேன். நீ மயங்க வேண்டுவதில்லை. நான் ஆயுதம் எடுப்பதில்லை. எம்மை ஒழிய உள்ள யாதவ குலத்துளோர்களையும் எம்முன் ஆன பலராமனையும் உதவியாகக் கொண்டு செல்க” என்று சொன்னான்.

அருச்சுனன் கண்ணனைச் சாரதியாக இருந்து தேர் செலுத்தினாற் போதும். அப்போது யாவர் எதிர்த்தாலும் வரிவில் குழைய வாங்கி மணித்தலை துமிப்பன் என்றான். பின் துரியோதனன் அவ்விடம் விட்டு அகன்றான். ஆறிரு நாமத்தோனும் ஐயிரு நாமத்தோனும் உதிட்டிரன் இருக்கைபுக்கார்.

உலூக மாமுனி தூது போய் வந்து செய்தியை உரைக்க யாவரும் பின் நடத்த வேண்டிய காரியத்தைப் பற்றி ஆலோசிக்க தொடங்கினர். இச்சமயத்தில் திருதராட்டிரனால் அனுப்பப்பட்ட சஞ்சய முனிவர் வந்துசேர்ந்தனர். அவர் கூறிய மொழிகளினின்றும் இராச்சியம் கிடைப்பதாகத் தெரியவில்லை. உதிட்டிரன் சஞ்சயனிடத்தில் மிகவும்கோபமாய்ச் சில வார்த்தைகள் சொல்லி அனுப்பினான்.

சஞ்சயன் தூது பயனற்றதாக, தருமபுத்திரன் கண்ணபிரானை வரவழைத்து அவரிடம் கூறுவனவற்றை எல்லாம் பணிவாய்க்கூறித் துரியோதனனிடம் தூது போய் வரும்படி வேண்டிக்கொண்டான்.

கண்ணபிரான் பாண்டவர்களை நோக்கி, "பின்னால் என்னை நிந்திப்பது கூடாது. அவரவருடைய மனோ நிச்சயத்தைக் கூறிவிடுங்கள்" என்றான். தரும புத்திரர் "ஆசாரியரையும் சுற்றத்தாரையும் அண்ணன் தம்பிமார்களையும் பாட்டன்மார்களையும் நண்பர்களையும் கொன்று வெற்றி அடைந்து இந்தப் புவியை ஆள்வதை விட, முன் என் பெரிய தந்தையார் கூறியபடி மீண்டும் வனம் போய்த் தவம் புரிவதே நல்லது" என்று கூறினர். உடனே வீமசேனன் எழுந்து வெகுண்டு கூறினான். அவனைச் சமாதானப்படுத்த அவன் மந்திரத்தினாற் கட்டுண்ட நாகம் போல அடங்கினான். பிறகு அருச்சுனன் எழுந்து வணங்கி "இன்னும் பொறுமையா காட்டவேண்டும்? அப்படியானால் தலையெடுப்பது எந்தக் காலம்? இவ்விதமாகத் தூதனுப்புவதில் பயனில்லை. இதற்கெல்லாம் வழிவரமாட்டான். 'அடியாத மாடு பணியாது', 'அடியைப்போல் அண்ணன் தம்பி உதவமாட்டான்' என்பதுபோல போரில் அவனை வெல்வதே நியாயம்" என்றான். இவ்விதமே மற்றைய இருவரும் இசைத்தனர்.

கண்ணபிரான் தூது போகவேண்டிய காரியங்களைத் திட்டப்படுத்திக் கொண்டு புறப்பட்டான். தூதாகச்சென்றவர் விதுரனின் மாளிகையில் தங்கினர். பின் துரியோதனன் சபைக்குப் போய் தான் தூது வந்த காரியத்தைத் தெரிவித்தார். அதற்குத் துரியோதனன் உடன்படவில்லை. "யான் ஒன்றுங் கொடேன்" என்று கூறி மறுத்துவிட்டான் அரவக்கொடியோன். சபை முடிந்ததும் விதுரன் மாளிகை அடைந்தனன். அப்போது குந்தி தேவி கண்ணனை வந்து உபசரித்தாள். பல காரியங்கள் பேசி முடிந்ததும், கண்ணன் குந்தியிடத்தில் கர்ணன் அவள் மகன்

என்றும், போரில் அருச்சுனன்மீது நாகக்கணையை விடாமலிருக்கும்படி கர்னனைக் கேட்டுக்கொள்ள வேண்டிய தந்திரோபாயங்களையுந் தெரிவித்தான். தான் தூதாகச் சென்ற காரியம் வீணாயிற்று என்பது உணர்ந்து, பாண்டவர்களிடம் வந்து, "இனி யுத்தத்திற்குச் சித்தமாக வேண்டியதுதான்" என்று கூறினன்.

## IX

இரு பக்கத்தாரும் போருக்குச் சித்தஞ் செய்தார்கள். அருச்சுனன் கண்ணபிரானின் ஏவலால் துர்க்கையை வழிபட்டு வரம் வேண்ட, அத்தேவி வெளிப்பட்டு வாழ்த்தி, "வெற்றி உனக்கே உரியதென்று" அநுக்கிரகிக்க, அவன் இனி நமக்கு அச்சமில்லை என்று தேறிப் போருக்கு ஆயத்தனாகித் தன் தேர்மிசைக் கொண்டான். கண்ணனும் சாரதியாக அத்தேர் மேற் கொண்டான். அநுமக்கொடி ஜய! ஜய! என்று கூறி அழைப்பதுபோல அத்தேர் முகட்டிடை விளங்குவதாயிற்று. தேரிற் பூட்டிய வெண்ணிறக் குதிரைகள் எட்டும் கால்களை நிலத்திடை வைத்தும் வையாதனவாய் பரபரப்புடன் சென்றன. கிருஷ்ணன் கடிவாளத்தைத் தூக்க இரதம் இருதிறச் சேனைக்கும் இடையே புகுந்தது.

புகுதலும் பகைவர் சேனைக்கிடையே விளங்குகின்ற பெரியோரையும் உறவினரையும் அருச்சுனன் கண்ணாரக் கண்டான். அவனை அறியாமல் வில் அவன் கையிலிருந்து நழுவியது. அவனும் தன் வசமின்றி தேரணையிற் சாய்ந்தான். மன வலியும் வீரமும் அவனை விட்டகன்றன. தனது சுற்றத்தாரையும், குரவரையும், நட்பினரையும் கொன்றொழிக்க வருந்தி சோர்வடைந்தான் பார்த்தன். "இச்

சரீரம் எடுத்தது இதற்காகவா'' என்று எண்ணினான். வீடு மனை தந்தையினும் பெரியவன். துரோணர் குரு. மற்ற வர்களையும் பார்க்கும்போது, யாவரும் அவனுக்கு வேண் டியவராகவே காணப்பட்டனர். அதனால் அவன் மனம் நடுக்கம் உற்றது. அவன் முகத்தில் விளங்கிய ஒளி அவனை விட்டு அகன்றது. தனக்குப் போர்புரிய மனமில்லை என்ப தாக அருச்சுனன் பரந்தாமனிடத்தில் தெரிவித்தான்.

"யான் இனி வில்லுங்கையில் எடேன். அறநூன் முறைவழுவி எமக்குரிய பூமியைக் கொடாது சகித்தற்கரிய கொடும்பழிகள் எல்லாம் புரிந்த தீயவரைத் தண்டித்தற்குப் போர்க்கோலங் கொண்டேனே யன்றி மற்றன்று. அது செய்தல் எனக்குரிய கடன். அதுவே சத்திரிய தருமமும் நியாயமும் ஆகும். தீயரை ஒழிக்க என் மனம் விரைகின் றது. ஆனால் அவருடன் சேர்ந்த பெரியோரைக் கொல்ல என் மனம் சம்மதப்படவில்லை. அவர்களைக் காணுமிடத்து யான் நடுக்கம் அடைகின்றேன். இதற்கு எல்லாம் கார ணம் அற்பமாகிய உலக இன்பத்தை அவாவும் அவாவே. ஒரு பிடி கீரையும் அரைநாழித் தண்ணீரும் இவ்வுடலை வளர்க்கப் போதுமாகவும் இங்கிலையில்லாத உடம்புக்காகவா இத்தனை கோடி உயிர்களையும் வதைக்கும் கருமத்தை மேற் கொண்டேன். ஆதலால் இப்போருக்கு யான் உடன் படேன்'' என்று கூறினான்.

இவ்வுரையால் கண்ணன் மனஞ் சிறிதும் அசைந்த தில்லை. அருச்சுனனுக்குத் தத்துவோபதேசம் செய்தற் குப் பக்குவகாலம் எப்போது வாய்க்கும் என நெடுங்காலம் நோக்கியிருந்தான். உலகத்திலுள்ள மாயையினால் கட் டுண்டான் அருச்சனன் என்று கண்டான். உடனே அருச்

சுனனை நோக்கி "அருச்சுனா! உனது அறிவும் ஆண்மையும் நன்றாயிருக்கின்றன. ஒருவருக்கு ஆடை எப்படியோ அப்படியே ஆன்மாவுக்கும் இத்தேகமாம். இவ் யாக்கை நீரிற் குமிழிபோல் நிலையற்றது. இவ்வுடல் எப்பொழுதும் மாறிக் கொண்டே வரும். இதற்காக வருந்துவது கூடாது. இம்மையில் நல்வினை செய்தால், அதற்குத் தகுந்த பலனைப் பெறுவோம். ஒவ்வொரு வருணத்தார்க்கும் உரிய கருமங்களைச் செய்வதில் பின்னடைவது தருமம் அன்று. சத்திரிய தருமம் உலகங் காத்தலாகும். அதாவது மறங்கடிந்து அறத்தை நிலை நாட்டுதலாகும். மறங்கடியுமிடத்து இவர் நமர் இவர் பிறர் என்னும் நோக்கங் கூடாதன்றோ. அவ்வாறு கருதுவது அஞ்ஞான மன்றோ" என்று கண்ணன் இதோபதேசஞ் செய்தான். இச்சிறந்த ஞானோபதேசத்தால் அருச்சுனனது இருதய கமலம் வாட்டம் நீங்கி மலர்ந்து தெளிந்து கிளர்வுற்றது. அவன் உடனே பரந்தாமன் பாதம் பணிந்து தன் கையிற் காண்டீவத்தை எடுத்தான்.

முதல் நாட் போரில் பாண்டவர்கட்குத் தோல்வி கிடைத்தது. அதனால் நெஞ்சு கலங்கிய உதிட்டிரனை அருச்சுனன் பலவாறு கூறித் தேற்றினன். இரண்டா நாட் போர் தொடங்கியது. வீடுமர் சேனையும் அருச்சுனன் சேனையும் களங்கொண்டன. கண்ணன் கூடிய வேகத்துடன் தேரைச் செலுத்தி வீடுமர் முன் நிறுத்தினன். வீடுமருக்கும் அருச்சுனனுக்கும் கொடிய யுத்தம் மூண்டது. இருவர் தொடுத்த பாணங்களாலும் ஆகாயம் எள்ளிடமின்றித் தூர்ந்து சூரியனும் மறைந்து இருளும் எற்பட்டது. இப்படி இருவரும் சரமாரி பொழிந்ததும் ஒருவரை ஒருவர் வெல்வதின்றி நெடுநேரம் போராடினர். சிறிது நேரம் சென்றபின் வீடுமர் களம் விட்டு அகலவும்

அருச்சுனன் அபிமன்னியுவுக்கு உதவியாகச் சென்று பகைவர்களைப் புறங்கொடுத்து ஓடச் செய்தனன். பாண்டவர்கள் வெற்றிமாலை புனைந்து விஜயசங்கம் முழக்கி மீண்டனர்.

மூன்று நாட் போர் தொடங்கியது. வீடுமர் மிக்க கோபமும் வீராவேசமும் உடையராய்த் தமது வீரரை மடக்கித் தேற்றிக்கொண்டு பாணமழை பொழிய, பாண்டவர் சேனை நிலைகுலைந்து வலிகெட்டுப் புறகிட்டது. அருச்சுனன் ஊக்கம் இன்றி இருத்தலைக்கண்டு கண்ணன் தேரினின்றும் குதித்து விடுமரை எதிர்க்கச் சென்றான். அப்போது அருச்சுனன் மின்னெனப் பாய்ந்து, கண்ணனைக் கட்டி "யாது செய்யப் புகுந்தனை. நீ கூறிய சத்தியத்தை மறந்தனைபோலும். கையிற் படை எடுப்பதில்லை என்று நீ துரியோதனனுக்குச் சொன்ன வாய்மையை மறந்தனையோ. இதுவும் இராஜதருமமோ. இப்படையைத தொலைக்க நீயும் படை எடுக்க வேண்டுமோ. யானே தொலைப்பன்" என்று கூறி, தேர்மிசைக்கொண்டான். கிருஷ்ணன் தானுந் தேரேறிக் குதிரைகளைத் தூண்டினன். அருச்சுனன் கரவேகத்தோடு சரந்தொடுக்கத் தலைப்பட்டான். பகைவர், ஒரு அம்பு விடுவதற்கு முன் அவன் பத்துச் சரங்களைத் தொடுத்தான். இவ்வாறு போர் நிகழ சூரியனும் மேல்கடலைச் சேர்ந்தான். வீடுமருந் தன் சேனையோடு பாசறை அடைந்தனர். பாண்டவரும் விஜய போர் முழக்கித் தம் பாசறைக்குச் சென்றனர்.

நான்கா நாட் போருந் தொடங்கியது. அற்றைநாட் போருக்கு யானைப்படையே கௌரவரால் விடப்பட்டது. வீமன் இப்படையை எதிர்த்து வெற்றி கொண்டான்.

அருச்சுனன் வீடுமர் சேனையை எதிர்த்து அவர் சேனையை மெலிவித்தான். ஆதித்தனும் மறைய, பாண்டவர் போரை நிறுத்தி தத்தம் பாசறை புகுந்தனர். இன்றும் பாண்டவர் வாகைமாலை சூடினர்.

இவ்வாறே உதிட்டிரன் சேனை நாள் தோறும் போரில் வெற்றிபெற்று வரும்போது எட்டாம் நாட் போரில் அருச்சுனனுக்கு நாககன்னிகை வயிற்றிற் பிறந்த புத்திரன் இறந்தான். இதனால் பீமன் முதலியோர் சிறிது சலிப் படைந்தாலும் போரில் ஊக்கம் கொண்டு மேன்மேல் வெற் றியே அடைந்தனர்.

கண்ணனின் கட்டளைப்படி உதிட்டிரன் வீடுமரை அடைந்து "வெல்லுவதற்கு உபாயம் கூறுக" என்று கேட்க, அப்போது அவர் "என்னைக் கொல்லும் பொருட் டுச் சிகண்டி என்பவன் அவதரித்திருக்கின்றான். அவன் என் முன்னே வந்தால் யான் வில் எடுக்கமாட்டேன்" என்று கூறினர்.

பத்தாம் நாள் உதயஞ் செய்தது. வீடுமரும் அர்ச்சுனனும் களங்கொண்டனர். கண்ணன் அர்ச்சுனனைப் பார்த்து "அர்ச்சுன! இன்று வீடுமருக்கு விண்ணுலகஞ் செல்லு வதற்கு விமானம் கொடுத்தல் வேண்டும்" என்று கூற, அருச்சுனன் பரந்தாமனைப் பார்த்து "என்னைத் தூக்கித் தம் மடிமீது இருத்தி உச்சி மோந்து தம் மேனியை யான் என் அழுக்குப் படிந்த கரங்களாலும் கால்களாலும் அசுத் தமாக்கவும் அதைப் பொறுத்து என்னை அன்பு ததும்பிய மொழிகளால் ஆதரித்து அணைத்து வளர்த்த இப் பெரி யாரை யான் எப்படிக் கொல்வேன். என் மூதாதையாகிய

இவர்மேல் எங்ஙனம் பாணந் தொடுப்பேன். இவரைக் கொல்வதினும் யான் இறந்து படுதல் நன்று'' என்றனன்.

கண்ணன் உடனே அவனைப் பார்த்து "அருச்சுனா! நீ சத்திரிய தருமத்தை மறந்துவிட்டாய். அதில் பின்னடைந்தால் அத்தருமத்தினின்றும் தவறினவனாவாய். நீ நடு நிலை திரும்பலாகாது. உன் வில்லை எடுத்து உன் கருமத்தை முடிப்பாய்'' என்று அவனைத் தேற்றினன்.

இதைக்கேட்ட அருச்சுனன் மனம் தெளிந்து பாணங்களைத் தொடுத்து மழைபோலப் பொழிந்தான். வீடுமரும் விடாது சரம் தொடுத்தனர். பாண்டவர்கள் சேனாவீரர் மடிவதைக் கண்ட கண்ணன் தன் சங்கை எடுத்து வீரநாதஞ் செய்ய, அருச்சுனன் இதுவே பீஷ்மரை வீழ்த்துதற்கு ஏற்ற சமயம் எனக் கருதிச் சிகண்டியை முன்னணியில் விடுத்துத் தன் காண்டீவத்தை எடுத்துச் சரம் தொடுத்தான். சிகண்டியைக் கண்டவுடன் வீடுமர் தன் கையினின்றும் வில்லை நழுவவிட்டார். அருச்சுனன் தொடுத்த பாணங்களை விட வீடுமர் கீழே விழுந்தார். உடனே இருபக்கத்தாரும் போரை நிறுத்தினர். சூரியனும் வாட்டமுற்றான் போல் மறைந்தான். அவர் ஒரு தலையணை கேட்க, துரியோதனன் கொடுத்த தலையணைகளைத் தூரே எறிந்துவிட்டு, அருச்சுனனிடத்தில் கேட்டார். அப்போது அருச்சுனன் மூன்று அஸ்திரங்களை எடுத்து மந்திரித்து அணையாக நிறுத்தினான். அதுகண்டு மிக மகிழ்ச்சி அடைந்தனர் வீடுமர். பின் தண்ணீர் கேட்டார். அருச்சுனன் தன் காண்டீவத்தை எடுத்து ஒரு பாணத்தால் பூமியைப் பிளக்கச் செய்து அதினின்றும் பொங்கி எழுந்த தண்ணீரை அள்ளிக்கொடுத்து அவர் தாகத்தைத் தணித்தான். அவர் சோகந்தீர்ந்து மீண்டும் அறிதுயில் அமர்ந்தார்.

## X

வீடுமர் விண்ணுலகை அடைந்ததும், துரோணர் படைத் தலைவராக நியமிக்கப்பட்டார். பதினோராம் நாட் போர் துரோணர் தலைமையின்கீழ் நடைபெற்றது. துரியோதனன் துரோணரைப் பார்த்து "தாங்கள் என்னிடம் உதிட்டிரனைப் பிடித்துக் கொண்டுவரவேண்டும். அதுவே தாங்கள் செய்யவேண்டிய உதவி" என்றான். துரோணர் கேட்டு நகைத்து "அப்பனே! அருச்சுனனைவிட்டு தருமர் பிரிந்திருக்கும்படி செய்வாயானால், அவரை உன் இஷ்டப்படி நான் பிடித்துத் தருகிறேன்" என்று கூறிய செய்தியை கிரீடி அறிந்தான். அவன் தருமபுத்திரரை விட்டுப் பிரிவதில்லை யென உறுதி செய்துகொண்டான். அப்பால் போர் செய்யத் தொடங்கி வெகு மும்முரமாய்ப் போர் புரிந்தனர். பாண்டவர் பக்கல் வெற்றி விளங்கிக்கொண்டே வந்தது. துரோணர் தருமரை எதிர்த்துப் பிடிக்க நெருங்கினர். அந்த வேளையில் துரோணரைத் தடுத்துக் கௌரவ சேனைகளை எல்லாம் சரக்கூடு கட்டி மறைத்துவிட்டான். அப்பொழுது சூரியன் அத்தகிரியை அடைந்தான்.

பன்னிரண்டாவது நாள் அருச்சுனன் திரிகர்த்தர்களோடு அமர் ஆடினன். பகதத்தன் என்பவன் தருமபுத்திரரை வளைந்துகொண்ட செய்தியைக் கேட்டு, அவர்களைத் தோற்கடித்து, பார்த்தன் பகதத்தனை எதிர்த்தான். பகதத்தன் உக்கிராக்கினி என்ற வேலாயுதத்தை அருச்சுனன்மீது விட்டான். அதைக் கண்ணபிரான் தமது மார்பில் ஏற்றுக்கொண்டு அவனைக் காத்தார். கண்ணன் ஒரு துரும்பை எடுத்து அருச்சுனனிடத்திற் கொடுத்து "இதை எஃகுக்கணை என்று தொடுத்துவிடு!" என்று அவனைக்

கொல்ல உபாயஞ் சொல்லிக் கொடுத்தார். அருச்சுனன் அவ்வாறே செய்து அவனை அதமாக்கினன்.

பதின்மூன்று நாட்போரில் அருச்சுனன் முந்தினதினம் போல திரிகர்த்தர் முதலியவர்களோடு போர் புரியச் சென்றான். போர் நடக்கும்போது, மற்றொரு பக்கம் அபிமன்னியு ஜயத்ரதன் மூலமாக மண்ணுலகை ஒருவினன். இதை அறிந்த அருச்சுனன் கேட்டுத் துக்கம் அடைந்து "நாளையதினம் அத்தமனத்திற்குள் ஜயத்ரதனை எப்படியாவது கொல்வேன்" என்று சபதஞ் செய்தான். அருச்சுனன் தன் சபதத்தை எவ்வாறு நிறைவேற்றுவதென்று கவலைப்பட்டான். கண்ணன் அவன் கவலையை மாற்றி "நான் கொல்கிறேன்" என்று கூறி அவனை ஒரு வனத்திற்குள் அழைத்துச் சென்று பசிதீர்க்க வேண்டினன். "சிவபூசை செய்வதற்குள் எங்ஙனம் சாப்பிடுவேன்" என்று அருச்சுனன் கூற, கண்ணன் "என்னை சிவமூர்த்தியாக ஏற்படுத்திப் பூசைசெய்" என்று திருவாய்மலர்ந்தருள, அங்ஙனமே அருச்சுனன் செய்தான். பின் பசிதீர்ந்து அருச்சுனன் நித்திரை போயினன். அப்போது கண்ணன் அருச்சுனனுடைய சூக்கும சரீரத்தை அழைத்துக் கொண்டு கைலங்கிரி போய்ச் சிவனைத் தரிசிக்கும்படி செய்து, பாசுபதாஸ்திரம் கேட்டான். சிவன் அநுக்கிரகத்தைப் பெற்றுத் திரும்பினன்.

உடனே, அருச்சுனன் விழித்து, தான் கனவு கண்டதைப் பகவானிடத்திற் பகர்ந்தான். அவனும் அவனை வாழ்த்திப் பின் பாசறைக்கு அழைத்துச் சென்றான்.

பதினான்காம் நாள் ஆரம்பித்தது. அருச்சுனன் உதிட்டிரனுக்குச் சாத்தகியை காவலாக வைத்து விட்டுப்

போருக்குப் புறப்பட்டான். துரோணரும் அருச்சுனனும் அமர் ஆடத் தலைப்பட்டனர். இருவரும் உலகம் நடுங்கும் படி கொடூரமான சமர்புரிந்தனர். அருச்சுனன் துரோணருக் கருகிலுள்ள வீரர்கள் எல்லாவரையும் அதஞ் செய்தான். பின் அங்கு நின்று அகன்று ஜயத்ரதனைத் தேடிப் புறப் பட்டான். அப்போது துரியோதனன் வந்து அவனைத் தடுத்துப் போர்புரிந்தான். அச்சமயம் பார்த்து கண்ணன் தமது பாஞ்ச சன்னியத்தை முழக்கினான். அருச்சுனனும் தன்னுடைய சங்கத்தை ஊதினான். இச்சப்தம் கேட்ட தும் தருமர் அருச்சுனனுக்கு ஏதோ ஆபத்தென்று கருதி சாத்தகியை அவனிடம் அனுப்பினார். வீமனுஞ் சென்றான். துரியோதனன் அருச்சுனனிடம் சென்று கடும்போர் புரிந்தான்.

இச்சமயத்தில் சூரியாத்தமனமாகும் சமயமாய் விட் டது. இதனை அறிந்த பகவான் பார்த்தனிடத்தில் தாம் செய்யப் போகுந் தந்திரத்தைச் சொல்லிவிட்டுச் சூரியனைத் தமது மாயையினால் மறைத்தான். அத்தமம் ஆயிற்று என்று எண்ணி ஜயத்ரதன் வெளிப்பட்டான். உடனே அருச்சுனன் ஒரு பாணத்தை விட்டு ஜயத்ரதன் தலையைக் கொய்து தந்தையின் மடியிற்போய் விழும்படி செய்தான். அர்ச்சுனன் அதர்மப் போர் நடத்தினான் என்று யாவரும் கூற, கண்ணன் தன் மாயையை நீக்கினான். அப்போது சூரியாத்தமானமாகுஞ் சமயம் இருந்தது.

பின் கர்ணன் கடோற்கஜனோடு போர்புரிந்து அர்ச் சுனனைக் கொல்ல வைத்திருந்த சக்தியை அவன்மீது விட்டுக் கொன்றான். இது அருச்சுனனுக்கு ஒரு பெரிய உதவியாயிற்று.

பதினைந்தாம் நாள் தொடங்கிற்று. அருச்சுனனும் துரோணரும் போர்புரிய ஏற்பட்டார்கள். கண்ணன் இடை நடுவில் அருச்சுனனிடத்தில் "அருச்சுனா! துரோணரை ஒருவரும் வெல்ல முடியாது. அசுவத்தாமனைக் கொன்று விட்டு அவருக்குத் தெரிவித்தால் அவரை எளிதல் வெல்லலாம்" என்றான். அருச்சுனன் அவ்வாறு செய்ய ஒருப்படவில்லை. வீமன் அசுவத்தாமா என்ற பெயருடைய யானையைக் கொன்றுவிட்டு, "அசுவத்தாமா இறந்தாயிற்று" என்று சப்தமிட, உடனே துரோணர் தன் கையினின்றும் ஆயுதங்களை எறிந்தார். அவர் ஆத்மா அவர் உடலை விட்டுப் பிரிந்து மேலே சென்றது. இதை அறிந்த அசுவத்தாமன் ஓடி வந்து அருச்சுனனை எதிர்த்து நாராயண அத்திரத்தை ஏவினான். அதைக் கண்டு வருந்திய பாண்டவர்களைக் கண்ணன் அவ்வஸ்திரத்திற்கு வணக்கம் கூறச் சொல்லி அதனின்றும் தப்புவித்தான்.

இவ்வாறு துரோணர் விண்ணுலகடைய, பதினாறுவது நாள் கர்ணன் படைத்தலைவனானான். அன்று ஒருவரும் தோல்வியின்றி அமர் ஆடினர். பதினேழாம் நாள் கர்ணன் சல்லியனைச் சாரதியாகக் கொண்டு போர்புரிந்தான். தருமர் அருச்சுனனைப் பார்த்து "கர்ணனைக் கொன்றுவிட்டாயா?" என்று கேட்க, "இல்லை" என்றான் அருச்சுனன். தருமர் "பேடியினிடத்தில் காண்டீவம் இருந்து என்ன பயன்" என்று அருச்சுனனை அவமதித்துப் பேச அருச்சுனன் கோபம் அடைந்து அவனைக் கொல்ல ஆரம்பித்தான். அப்போது கண்ணன் அவனைச் சமாதானப்படுத்தி அவன் கோபத்தைக் கர்ணன்மேல் ஆக்கினான். அருச்சுனன் மிகுந்த சீற்றத்தோடு புறப்பட்டான். அருச்சுனன்

விடும் தெய்வ அத்திரங்கள் எல்லாம் கர்ணனை ஒன்றுஞ் செய்யவில்லை.

கர்ணன் பின் தன்னிடத்திலிருந்த நாகாஸ்திரத்தை எய்தான். காண்டவ தகனத்தில் தாய் இறக்க, தப்பி ஓடிய ஓர் பாம்புக்குட்டி பாதாளத்திலிருந்து வந்து அருச்சுனனுடைய உயிரைக் குடிப்பதற்காக கர்ணன் அம்பறாத் தூணியில் ஓர் பாணமாக அமைந்தது. நாகாஸ்திரம் வருவதை அறிந்த பகவான் தம் இரதத்தைக் கீழே பதியும் படி தமது காலால் அழுத்திவிட, வந்த பாணம் குறிதப்பி அருச்சுனனுடைய தலைக்குமேலாகப் போய்விட்டது.

அந்த அஸ்திரம் வீணானது கண்ட கர்ணன் விசன முற்றானாயினும் தயங்காமல் போர் புரிந்தான். அப்போது அவனுடைய இரதம் கீழே புதைந்தது. பின் அவன் ஏவிய பாணங்கள் எல்லாம் பரசுராமர் சாபப்படி பயன்படாமற் போயின. இச்சமயம் பார்த்து அருச்சுனன் கர்ணன்மீது பாணங்களைப் பொழிந்தான். அவைகள் எல்லாம் பாழாய்ப்போயின. பின் கண்ணபிரான் அவனிடத்திற் சென்று புண்ணியங்களை யாசிக்க, கர்ணன் உவந்து கொடுத்தான். அருச்சுனன் பாசுபதாஸ்திரத்தை எடுத்து விட அது சென்று கர்ணனைக்கொன்று அவனிடம் வந்தது. பகவான் காட்சிதர, கர்ணன் வீரசுவர்க்கம் அடைந்தான்.

பதினெட்டாவது நாள் பின்னும் போர் தொடங்கிற்று. சல்லியன் சேனாபதியானான். சிறிது நேரம் இரு பக்கத்தாரும் போர் புரிந்தனர். பிறகு விசயன், தருமர், வீமன் யாவரும் சல்லியனை வளைந்து கொண்டார்கள். தருமருக்குக் காயம்பட்ட இடத்தும், அவர் விட்ட ஒரு

அஸ்திரத்தால் சல்லியன் சாபல்யம் அடைந்தான். வீரர் பலர் மடிந்துவிட்டபடியால் துரியோதனன் மனம் வருந்தி சேனபதியாயினன்.

பாண்டவர்கள் மூலைக்கொருவராய் அவனை எதிர்த்தார்கள். அவன் யுத்தக்களத்தினின்றும் ஓடி, காடடைந்தான். அடுத்துள்ள மடுவில் குதித்து ஜபஞ் செய்து இறந்த உயிர்களை எழுப்பினான். பாண்டவர்கள் துரியோதனனைத் தேடிச் சென்றார்கள். அவனைக் கண்டு வீமன் பலவாறு இழித்துரைத்தான். தருமர் சமாதானத்துக்கு அழைக்க அதற்கு மறுத்தான். வீமனும் துரியோதனனும் சண்டை செய்தார்கள். அருச்சுனன் வீமனுக்கு "துரியோதனன் உயிர் நிலை தொடையிலிருக்கிறது" என்று சாடை செய்ய, உடனே வீமன் அவனைத் தொடையிலடித்து வீழ்த்தினான். சூரியாஸ்தமன மானதும் பாண்டவர்கள் பாசறைச் சென்றார்கள். துரியோதனன் வீர சுவர்க்கம் அடைந்தான். அசுவத்தாமன் இளம் பஞ்சபாண்டவர்களையும் சிகண்டி முதலியோர்களையும் கொன்றான். இச்செய்தி திரௌபதிக்கு எட்டியது.

பத்தொன்பதாம் நாட் காலையில் திரௌபதி வந்து "என் மக்களையும் என் சகோதரனையும் கொன்றவன் தலையை அறுத்து என் பாதத்திலே போட்டு மிதித்த பிறகுதான் என் தலையை முடிப்பேன்", என்றாள். உடனே கண்ணன் "இது நிறைவேற வேண்டுமானால் அசுவத்தாமன் தலையிலுள்ள மாணிக்கம் கொண்டு வரவேண்டும்" என்றான்.

அசுவத்தாமனை வீமன் எதிர்க்க, அவன் பிரமசிரம் என்னும் கணையைத் தொடுத்து விட்டான். இது அநேக

ரூபங்களாய் வர வீமன் பயந்து அசைவற்று நின்றுவிட்டான். உடனே அருச்சுனன் பிரமசிரநாமக் கணையை தொடுத்து விட்டான். இவ்விரண்டும் ஒன்றோடொன்று மோதி அமர் புரிந்தன. இதனால் ஆத்ம கோடிகள் பதை பதைத்தன.

அச்சமயம் நாரதரும் வேதவியாசரும் அவ்விடம் வந்து அசுவத்தாமனைப் பார்த்து, அவன் விட்ட கணையை மீட்டுக்கொள்ளும்படி வேண்டினர். அவன் அதை மீட்கத் தன்னாலாகாது என்று கூற, அருச்சுனனை வேண்டினார்கள். அவன் "என் கணைக்கு இலக்காக அசுவத்தாமனின் தலையிலுள்ள மாணிக்கம் கிடைக்குமானால் யான் கணையை மீட்கின்றேன்" என்றான். அசுவத்தாமன் மந்திரத்தை உருவேற்றி பாண்டவர்களின் பத்தினிமார்களின் கருப்பத்தையும் உத்தரையின் கருப்பத்தையும் அழித்தான். அப்பால் முனிவர்கள் அசுவத்தாமனைச் சமாதானப்படுத்தி அவன் தலை இரத்தினத்தை அருச்சுனனுக்கு வாங்கிக் கொடுத்தார்கள். அதைப் பெற்றுக்கொண்டு தன் பாணத்தைத் திருப்பிக்கொண்டான். அசுவத்தாமன் தவத்திற்குச் சென்றான். அருச்சுனன் இரத்தினத்தைப் பாஞ்சாலியிடம் கொடுத்தான்.

பின் திருதராஷ்டிரன், விதுரர், வியாசர் முதலியோர்கள் சம்மதப்படி தருமர் முடிசூட்டப் பெற்றார். வீமசேனனுக்கு இளவரசுப் பட்டமும், அருச்சுனனுக்கு சேனாபதித் தனமும், நகுலனுக்குப் பொக்கிஷத் தலைமையும், சகாதேவனுக்கு மந்திரி பதவியும் அளிக்கப்பட்டன. இவர்கள் உதவியால் உதிட்டிரன் நீதி தவறாமல் செங்கோல் செலுத்தலானான். உலகங் களிகூர உதிட்டிரன் அரசியற்றி மறங் கடிந்து அறங்களை வளர்ப்பானாயினான்.

இனி ஊழிவாழ்திர் என இளைஞர் ஒரு
　　நால்வருடன் அறத்தின் மைந்தன்
தனை இருத்தி மீள்வல் எனச் சாத்தகியும்
　　மலாயுதனுந் தன்னைச் சூழ
வினை அகற்றும் பசுந்துளவோன் துவரை நகர்த்
　　திசை நோக்கி மீண்டான் சீர்த்திக்
கனைகடற்பார் அளித்தவரும் அந்நகரின்
　　அறநெறியே கருதி வாழ்ந்தார்.

முற்றிற்று




THE ROYAL PRINTING WORKS, MOUNT ROAD, MADRAS.